உ.

ஷண்முகர்ஸஹாயம்.





# பக்திரஸ பரிபாலன கீர்த்தனை.

—(o)—

இஃது
திருநெல்வேலி ஜில்லாவைச்சேர்ந்த
பாட்டப்பத்து கிராமத்திலிருக்கும்

**T. S. லோகாம்பாளால்,**

இயற்றப்பட்டு
சாம்பவர் வடகரை,
ஸ்ரீநிவாஸபாகவதர் அவர்களால்,
ராகம், தாளம் அமைக்கப்பட்டு
கோவில்பட்டித்தாலூகா எட்டயபுரம்
சப்போஸ்ட் மாஸ்டர்
G. L. இராமலிங்கம் ஐயரவர்களால்,
பரிசோதிக்கப்பட்டு

திருநெல்வேலி டவுன்
ஸ்ரீ கிருஷ்ணவிலாசம் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

---

PRICE. Rs. 1]    1922.    [விலை ரூ. 1

ஷண்முகர் ஸஹாயம்,





# பக்திரஸ பரிபாலன கீர்த்தனை,

—(o)—

இஃது

திருநெல்வேலி கஸ்பாவைச்சேர்ந்த

பாட்டப்பத்து கிராமத்திலிருக்கும்

**T. S. லோகாம்பாளால்,**

இயற்றப்பட்டு

சாம்பவர் வடகரை,

ஸ்ரீநிவாஸபாகவதர் அவர்களால்,

ராகம், தாளம் அமைக்கப்பட்டு

கோவில்பட்டித்தாலூகா எட்டயபுரம்

சப்போஸ்ட் மாஸ்ட்டர்

**G. L. இராமலிங்கம் அய்யரவர்களால்,**

பரிசோதிக்கப்பட்டு

திருநெல்வேலிடவுண்

ஸ்ரீ கிருஷ்ணவிலாசம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

PRICE. Rs. 1] 1922. [விலை ரூ. 1

உ

ஷண்முகர் ஸஹாயம்.

# நோட்டீஸ்.

இதனுல் நண்பர்கள் யாவர்களுக்கும் தெரிவித்துக்கொள்வது யாதெனில்:—

இப்பொழுது அச்சிட்டு வெளி வந்திருக்கும் பக்திரஸ பரிபாலன் கீர்த்தனை புஸ்தகத்தை பூராவும் பூர்த்திசெய்து வெளிவிட்டு யாவர்களும் படித்து களிப்படைந்து பலன் பெறுமாறு அநேகம் நண்பர்கள் என்னிடம் கேட்டுக்கொண்டபடி இந்தப் புஸ்தகத்தை இப்பொழுது அச்சிடப்பட்டிருக்கிறது. ஆனல் சில அசௌகர்யங்களால் இதன் பின் பக்கம் குறித்த இந்த புஸ்தகத்திற்குள்ள பாக்கி பாகங்கள் அட்டவணையிற்கண்டபடி அச்சிடப்படவில்லை. ஆகையால் கூடிய சீக்கிரத்தில் அந்தப்பாகங்கள் சேர்த்து புஸ்தகம் அச்சிடப்படும்.

இங்ஙனம்.

T. S. லோகாம்பாள்.

# அட்டவணை.



இவைகள் கூடிய சீக்கிரம் அச்சிட்டு வெளிவரும்.

இங்ஙனம்,

**T. S. லோகாம்பாள்.**

உ

ஷண்முகர் ஸஹாயம்.

# முகவுரை.

இன்னாட்டார்களுக்கு அறிவிப்பது ஏதவெனில்:—

கருணாமூர்த்தியாய் ஸர்வஜீவ பரிபாலனனாய் விளங்கின்ற ஸாக்ஷாத் சரவணபவன் மகிமையை மறந்து அவனது கிருபைக் கிலக்காகாது தேவதிறியக் மனுஷிய ஸ்தாபர ஜங்கமாயுள்ள பல யோனிகளிலும் மாறிமாறி பிறந்து அக்கந்த ஜாதிக்குறிய அன்னபானாதிகளிலே ஆஸ்தை வைத்து அதுவே ஸத்தியமென்று மகிழ்ந்து வாழ்நாளை பாழ்நாளாக கழித்து விடாமல் பகவத்தியான ஆராதனாதிகளுக்குறியதாய் அதி துர்லபமான இம்மானிடப்பிறவியில்பிறந்த நாம் உண்டியே உடையே கண்டு மகிழ்ந்து காலம் கழித்திடாவண்ணம் அருவமாய் அநாதியாய் நின்ற பரப்பிரம்மம் இவ்வவனியில் வந்து சரவண பொய்கையில் ஆறுமுகங்களோடும் பன்னிரு கரங்களோடும் அவதரித்து சூரபத்மாஸுரன் முதலிய துஷ்டர்களை எல்லாம் ஸம்ஹரித்து இந்திரனுக்கு முடிதரித்து இவ்வுலகில் ஸ்தலங்கள்தோறும், எழுந்தருளி இராநின்ற ஸாக்ஷாத் ஷண்முகப் பிரபுவை பக்தியுடன் பூஜித்தும், தியானம் செய்தும் நாம சங்கீர்த்தனங்களால் ஸ்தோத்திரம் செய்தும் அவர் கிருபையை பெறவேண்டுமென்று வேதங்கள் முறையிடுகின்றன, இக்கலியுகத்தில் நாம ஸங்கீர்த்தனமே முக்கியமென்றும், சிறந்ததென்றும், அதினாலேயே அந்த கிருபையை சீக்கிரம் பெறலாமென்றும் ஷண்முகமே பிறத்தியக்ஷ தெய்வமென்றும் கலியுகவரதரென்றும் அடியார்கள் கோரிய வரத்தை எளிதில் அருள்வாரென்றும் கூறுகின்றன ஆகையால் இந்த ஷண்முகர்நாம ஸங்கீர்த்தனங்களில் சில பிழைகள் இருப்பினும் அவைகளை பொருள்படுத்தாமல் அதின் குணங்களையே கருதி பக்தியுடன் படித்துப் பாராயணஞ்செய்தும் வருபவர்கள் பெரிதான பலனைப்பெற்று வாழ்வார்களாக.

G. L. இராமலிங்கம் அய்யர்,

சப்போஸ்ட்டு மாஸ்டர்.

# அட்டவணை.

## ஷண்முகர் சிந்துகள்;

| நிர். | விஷயம் | பக்கம். |
|---|---|---|




உ

விநாயகர் ஸஹாயம்.



# விநாயகர் கீர்த்தனை.



ராகம் மோஹனம்—தாளம் சாப்பு.

பல்லவி.

கட கரி முகத்தோனே வாரும் எந்தன்
கலிக்கி முன் அருள் செய்து காரும்.

அனுபல்லவி.

வடவரையும் கோட்டை மாற்றிட வலக்கை
வில்லோனே வல்லபை நாதனே தேவனே. (கடகரி)

சரணம்.

சக்தி லோகாம்பிகைபாலா நிஜ தாஸர்க்கெல்லாம் ஸொந்தசீலா
நித்திய கல்யாண கோலா காலா என்னை ரக்ஷித்தருளும்—
ஆதி மூலா,
வேலனுக்காக அன்று யானை யாகவே வந்து
கானகத்தில் வள்ளியை கல்யாணம் செய்து வைத்த. (கடகரி)

உ

ஸரஸ்வதி ஸஹாயம்.



# ஸரஸ்வதி கீர்த்தனை.



ராகம் சக்கிரவாகம்—தாளம் ரூபகம்.

பல்லவி.

வாணி நீ கிருபை புரிவாய்-வாக்-வாணி நீ கிருபை புரிவாய்
நல்-வரம் உகந்து தருவாய் தேவி-வாணி நீ கிருபை புரிவாய்.

அனுபல்லவி.

வீணா புஸ்தக தாரி விரிஞ்சன் மனம் மகிழும் பாரி. (வாணி)

சரணம்.

நளின பங்கஜ வாஸி நாமகளெனும் பெயர் வீசி
கருணா கிருபா கடாக்ஷி கலியுக வர தாய காக்ஷி. (வாணி)



உ

ஷண்முகர் ஸஹாயம்.



# ஷண்முகர் கீர்த்தனைகள்.



1

ராகம் தோடி—தாளம் ஏகம்.

பல்லவி.

ஆ அழைத்து வாடி ஆடும் மயிலே பாடும் குயிலே
பாலஸுப்பிரமண்யனை.

சரணங்கள்.

தேவர் துயர்க்கிரங்கி தேவர்கள் ஸேனை
தலைவனென்றொரு பெயரும் தரித்துக்கொண்டான்,
மூவர்களாலும் வெல்ல முடியாதந்த
கொடிய சூரன் முடி அறுத்தெறிந்தான்,
யாவர்களும் ஸ்துதிக்கும் மாது தெய்வானை
தேவியையும் மணம் செய்து பூரித்திருந்தான்,
தேவாதி தேவனை செந்தூர் நாதனை
ஸ்கந்த முருகனை இந்தக்ஷணமே ஓடி. (ஆ) 1

கானகம் தன்னில்ச் சென்று வேலரும் அந்த
மான் விழி வள்ளி மீதினில் காதல்கொண்டு,
கோலொன்று தான் பிடித்து கூனிக்குறுகி
கால்கள் தள்ளாட தோளில் வலை சுமந்து,
பாலே வள்ளி இடத்தில் லீலைகள் செய்ய
ஜாலங்கள் செய்து தேனும் தினைமாவுண்ட,
லோகாம்பிகை பாலனே பேதை நான் கண்டு
காதல்கள் தீர வேகமாகவே ஓடி. (ஆ) 2

——:(*):——

2

ராகம் முகாரி—தாளம் சாப்பு.

பல்லவி.

இதுவென்ன மோடிபோ சொல் எந்தன் மீதில் வேலரே.

அனுபல்லவி.

விதியைச் சிறையில் வைத்த விமல பிரகாசரே. (இது)

சரணம்.

அம்புஜ வதன அஸுர குலாந்தக சரண
அமர குஞ்சரி மகிழ் ரமண அதி கருண கிருபா நிபுண. (இது)

———

3

ராகம் சங்கராபரணம்—தாளம் ஆதி,

பல்லவி.

இந்த வர்மம் ஏன் ஈசா
திருச்செதில் மேவி வளர் ஸ்ரீ முருகேசா
இந்த வர்மம் ஏன் ஈசா,

சரணங்கள்.

எந்தன் துயர் அறியாதோ ஏ ஸ்கந்தனே இது என்ன சூதோ
உன் மைந்தன் மீதில் என்ன வாதோ
நீ மாமயில் மேல் வர தாமஸம் ஏதோ. (இந்த) 1

கருணை எங்கேன் குடிபோச்சோ உன் கருத்தெவர் மேல்
நிலை ஆச்சோ
இத்தருணம் கிருபை செய்தால் ஏச்சோ
தமியேன் சொல்வதெல்லாம் வெறும் பேச்சோ. (இந்த) 2

தாரகம் வேறெனக்கேது இத்தரணியில் உன்னை அல்லாது
சிறு பாலகனான என் மீது
ஏ பிரபுவே நீர் கிருபை கூறும் இப்போது. (இந்த) 3

பன்னிருகை வடிவேலா இரு கன்னியர் மகிழ்ந்திடும் லோலா
எங்கள் அன்னை உலகம்மை பாலா
செந்தில் ஆடும் மயில் மேல் அமர்ந்திடும் கோலா. (இந்த) 4

---

4

ராகம் காம்போதி—தாளம் சாப்பு.

பல்லவி.

இரப்பாளி மகனுக்கு எதைச்சொன்னாலும் தகும்
இவர்க்கிணை சொல்லப்போமோ.

அனுபல்லவி.

பிறப்பிறப்பைக் கெடுத்து பேரின்பத்தைக் கொடுக்கும்
கருப்பை தன்னை அறுக்கும் கால பயம் தவிர்க்கும். (இரப்)

சரணங்கள்.

பாலன் மார்க்கண்டனுக்காய் காலனையும் உதைத்த
பரம கிருபா நிதியடி

ஆல விஷம் புஜித்து அமரர்களை ரெக்ஷித்த
அதி கருணை நிதியடி.
தாருகா வனம் தன்னில் தலை ஓட்டை கையில் கொண்டு
தாதன் போலவே பாடி சோறு கேட்டுத்திரிந்த. (இரப்) 1

அண்டின பெயர்களை ஆதரித்தருள் செய்யும்
அய்யனிவன்தாண்டி.
தொண்டர்கள் துயர்களை தூள் தூளியாய் அடிக்கும்
சுப்பையனிவன் தாண்டி.
பண்டமரர் சிறையை விடுக்க அவதரித்த
பன்னிரு கையன் முருகையனென்னும்
பெயர் கொண்டாண்டி. (இரப்) 2

---

5

ராகம் மோஹனம்—தாளம் ஆதி.

பல்லவி.

இன்னம் செவி கேளாததென்ன
இதை என்னுடன் சொன்னால் உனக்குக் குறையென்ன,

அநுபல்லவி.

தன்னிகர் ஒன்றில்லாத பன்னிருகையா மிக
சின்னஞ் சிறியேன் மனம் கன்னிக் கதறுவதனைக். (இன்னம்)

சரணங்கள்.

ஆழாழி ததும்பி வாரது அலை நுரை குமிழுடன்
ஆழாழி ததும்பி வாரது
இஷ்ட ஜல சரீரி இஷ்டமுடனுலாவும்
ஆழாழி ததும்பி வாரது

அரும் சிறிய பாலானும் பால் குடியாது
மேகாதி மழையை விடாது இடிகனல் இருளுடன்
மேகாதி மழையை விடாது
சட்டமாய் கடல் கிட்டியே காம் தட்டியே அண்டம்
முட்டியே வரும்-மேகாதி மழையை விடாது
என் குறை கேட்டால் நீயும் ஜெயவித்தொன்றைச்சுடாது
யாகாதி லோக பாலன யோகாதி யோக ஸாதன
தேகாதி போக காரண திருஉருமாமலை பாலன. (இன்னம்) 1

ஸேனு பதி என்னும் பெயர் தரித்தாய் ஜெகமிசை புகழ் பெற
ஸேனு பதி என்னும் பெயர் தரித்தாய்
திகழ் சிகியின் பிடரில் அழகு பெற அமர்ந்து
ஸேனு பதி என்னும்பெயர் தரித்தாய்
செந்தாமரையின் மீதில் சரவணையில் உதித்தாய்
தேவாதி தேவர்களை காத்தாய் தினம் தொழுது பணியும்
தேவாதி தேவர்களை காத்தாய்
தீனராய் பர ஞானராய் குக தியானராய் சூரனுல் வருந்திடும்
தேவாதி தேவர்களை காத்தாய்
மூவர் கலங்கும் சூரனை ஓர் கணத்தில் மாய்த்தாய்
தீதான சோகத்தால் ஜெக காதா காவென்று சொன்ன சொல்
நீதா சோதித்தது போ தா கிருபைகூர் தாதா.(இன்னம்) 2

---

6

ராகம் தோடி—தாளம் ஏகம். (திசர நடை)

பல்லவி.

இன்னம் தயவு வல்லையா பன்னிருகை வேலையா
இன்னம் தயவு வல்லையா.

அநுபல்லவி.

அன்னை உலகம்மை மகிழ் பாலனே வேலனே. (இன்னம்)

சரணங்கள்.

நெல்லை நகர் வாஸனே வல்லி மகிழ் நேசனே
செல்வக் குமரேசனே ஈசனே ஈசனே. (இன்னம்) 1

சூரனை வதைக்கலையா வானோர் துயர் தீர்க்கலையா
தீனனை பாரா தேனையா ஏனையா ஏனையா. (இன்னம்) 2

---

## 7

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

இன்னம் தயவு வல்லையோ ஷண்முகனே
இன்னம் தயவு வல்லையோ.

அநுபல்லவி.

நன்னயம் சேர் செந்தில் நாயகமே. (இன்னம்)

சரணங்கள்.

மான் வயிற்றில் உதித்த பெண் மணியை
அவளுடன் விவாகித்த கண் மணியே. (இன்னம்) 1

சின்னஞ் சிறியேன் நான எந்தன் [illegible]
அன்னை உலகம்மை பாலகனே. (இன்னம்) 2

---

## 8

ராகம் நாதநாமக்கிரியை—தாளம் ஏகம்.

பல்லவி.

இன்னம் வரக்காணேனே வன்ன மயில் வாகனன்—ஓஸகி
இன்னம் வரக்காணேனே.

சரணங்கள்.

என்ன பிழைகள் செய்தேன் பன்னிருகையனுக்கு - நான் இனி
என்ன பிழைகள் செய்தேன்
பன்னிருகையன் என் முன்—ஓ ஸகி. (இன்னம்) 1

என்னை மறந்தாரோடி அன்னியர் போதமோடி — ஓ குகன்
என்னை மறந்தாரோடி
அன்னியர் போதமோடி — ஓ ஸகி. (இன்னம்) 2

கூவி அழைப்பதெல்லாம் குகன் காதில் கேழ்க்கலையோ —
நான் இனி — கூவி அழைப்பதெல்லாம்
குகன் காதில் கேழ்க்கலையோ — ஓ ஸகி. (இன்னம்) 3

வாடி இருப்பதெல்லாம் வடி வேலர் அறியாரோடி — நான் இனி
வாடி இருப்பதெல்லாம்
வேலர் அறியாரோடி — ஓ ஸகி. (இன்னம்) 4

தேசாந்தரம் போனாரோ செந்தூர் தன்னிலில்லையோ - ஓ குகன்
தேசாந்தரம் போனாரோ
செந்தூர் தன்னிலில்லையோ — ஓ ஸகி. (இன்னம்) 5

என்று வருவாரோடி என் குறை தீர்ப்பாரோடி — ஓ குகன்
என்று வருவாரோடி
என் குறை தீர்ப்பாரோடி — ஓ ஸகி. (இன்னம்) 6

லோகாம்பிகை அருள் பாலன் இரு தேவியருடன் லோலன் —
ஓ குகன் — லோகாம்பிகை அருள் பாலன்
தேவியருடன் லோலன் — ஓ ஸகி. (இன்னம்) 7



9

ராகம் சாவேரி — தாளம் ஆதி.

பல்லவி.

ஈசன் ஸமயம் என்னடீ செல்வக் குமரேசன் ஸமயம் என்னடீ.

அனுபல்லவி.

வாஸவன் முதல் தேவர் பூஜிக்கும் ஸமயமோ
வரை முனி காதில் உபதேசிக்கும் ஸமயமோ. (ஈசன்)

சரணங்கள்.

கானகத்தில் காலால் நடந்திடும் ஸமயமோ
கனிமாவும் தேனும் உண்டு களைப்பாறும் ஸமயமோ
மான் விழி வள்ளி தன்னை மணம் செய்யும் ஸமயமோ
மகிழ்ந்து வள்ளியுடனே லீலை செய் ஸமயமோ. (ஈசன்) 1

ரெம்பை ஊர்வசி மாதர் நடித்திடும் ஸமயமோ
தும்புரு யாழ் முனி ஸ்துதித்திடும் ஸமயமோ
வம்பரைப் போர் தன்னில் வதைத்திடும் ஸமயமோ
அன்பர்களுக்கு வரம் அளித்திடும் ஸமயமோ. (ஈசன்) 2

தெய்வ குஞ்சரி காதல் தீர்த்திடும் ஸமயமோ
சினங் கொண்ட வள்ளி மனம் தேற்றிடும் ஸமயமோ
பாவலர்கள் புகழ் படித்திடும் ஸமயமோ
பரிந்தவர்கள்க்கு வரம் கொடுத்திடும் ஸமயமோ. (ஈசன்) 3

பார் உலகம் அதனை படைத்திடும் ஸமயமோ
பங்கையத்தோன் சிறை விடுத்திடும் ஸமயமோ
கார் குழல் உலகம்மை களித்திடும் ஸமயமோ
கருணை சுரேந்திரன் குறை முடித்திடும் ஸமயமோ. (ஈசன்) 4

12

## 10

ராகம் தோடி—தாளம் ரூபகம்.

பல்லவி.

உனையே நம்பி உலகில் உலாவுறேன்
உயர் விந்து நகர் ஸகந்தா-உனையே நம்பி உலகில் உலாவுறேன்.

அனுபல்லவி.

தினமும் வானவர் பூஜித்துத்தொழ —
கனக வீட்டினில் வஸிக்கும் குகனே. (உனையே)

சரணங்கள்.

வள்ளி மீதில் மோகம் கொண்டோனே
சூரனுக்காக புள்ளி மயில் மீதில் நின்றோனே
கள்ளராம் அவுணரை வதைத்தோனே
வெள்ளை விடை மேல் வருவோனருள் குகனே. (உனையே) 1

என்தனை நீ கை விடலாமோ
இத்துயர் தன்னை இன்னமும் ஸஹித்திடப் போமோ
ஸன்னதியி[illegible] தயவில்லாதவர் போல்
ஷண்முகனே இப்படி இருந்திடலாமோ. (உனையே) 2

காலன் கோபத்துக்கிரையாக்குவாயோ
அல்லாதுன் கமலக்கழலிணைக்கென்னை ஆளாக்குவாயோ
துயரான இருள் தனை நீக்குவாயோ
உன் தொண்டருடன் என்னை கூட்டாக்குவாயோ. (உனையே) 3

பாலனென்றென்னை ஆதரிப்பாயோ
முன் போல இன்னமும் பாராமலே இருப்பாயோ

வேலனே வந்தென் துயரம் தீர்ப்பாயோ
லோகாம்பிகை பாலனே வந்தென்னைக் கார்ப்பாயோ.(உனையே)

---

## 11

ராகம் முஹாரி — தாளம் சாப்பு.

பல்லவி.

என் மேல் கோபம் நீர் கொள்வது சரியா.

அனுபல்லவி.

ப்ரலன் என்றறிந்தும் நீர் வேல் முருகையா. (என்)

சரணங்கள்.

[illegible]ன்னிருகை[illegible] பாலஸு[illegible]ப்பிரமண்யனே
இ[illegible] கன்னியர்கள் லோலனே சின்னஞ் சிறியேனை. (என்) 1

ப[illegible]ன்மறை ஓதிடும் பழனி மலையில் வாழும்
சின்மய வடி வேலா ஸ்ரீ லோகாம்பிகை பாலா. (என்) 2

——:(*):——

## 12

ராகம் கல்யாணி—தாளம் ஆதி.

பல்லவி.

என்றைக்கிரங்குவாயோ எந்தன் மேல் என்றைக்கிரங்குவாயோ

அனுபல்லவி.

என்றைக்கிரங்குவாயோ கன்றைத்தேடும் பசுப் போல்
கொன்றை மாலை அணிந்த குமாரகுருபரனே. (என்றை)

சரணங்கள்.

பக்தி செய்யும் வகை அறியேன — செய்பவர் போல
பாவனை கொண்ட சிறியேன்
துஷ்ட மனதைக் கட்ட அறியேன் — அதினல் படும்
துன்பங்கள் சொல்லி முடியேன்
இஷ்ட தெய்வமான எந்தன் குருநாதனே
கஷ்டம் எல்லாம் சொல்லி கதறினேன் உன் முன்னே (என்னை) 1

ஆருடன் சொல்வேன் பரிதாபம் — அய்யனே என்னை
காப்பது உந்தன் பாரம்
வாது செய்தது போதும் — மாமயில் ஏறி
வந்தருள்வாய் இந்நேரம்
ஏதினிமேல் படமுடியாது இத்துயரம்
எல்லாம் நீ அறியாயோ எளியேன் மனவி[illegible] (என்ன..)

---

13

ராகம் சங்கராபரணம் — தாளம் ரூபகம்.

பல்லவி.

என்ன செய்வேன் ஷண்முகா நான் ஏது செய்குவேன் - நான்

அநுபல்லவி.

இன்னம் உன் மனம் செற்றேனும் இரங்காதிருந்தால்.(என்ன)

சரணங்கள்.

சின்னஞ் சிறு பாலனன்றே செந்தூர் வேலனே
எந்தனைக் காராது நின்றே ஸ்கந்த வேலனே. (என்ன) 1

வள்ளி மணவாளனே உன் உள்ளம் இரங்காயோ
துள்ளுகின்ற எந்தன் மனத் துயரை தீராயோ. (என்ன) 2

கோலமயில் ஏறி வந்தென் குறைகள் தீராயோ
லோகாம்பிகை பாலனே ஓர் மொழி பகருவாயோ. (என்ன) 3

## 14

ராகம் பைரவி—தாளம் சாப்பு.

பல்லவி.

என்ன தவம் செய்து வந்தோமோ – என் ஸகிமாரே
இந்த பிரபு சேர்வை கண்டிட.

அனுபல்லவி.

வன்னதானம் ஸொர்ணதானம் அனேகதானம் —
செய்திட்டோமோ
மின்னலிடை வள்ளி பங்கன் பொன்னடி தெரிசித்திட.(என்ன)

சரணம்.

வேலையில் முழுகி வந்தோமோ — என் ஸகிமாரே
வெகுவித விருதம் இருந்தோமோ
மாலயன் மகிழும்படி மகங்கள் கோடி செய்திட்டோமோ
கோலமயில் ஏறிவரும் குமரனை தெரிசித்திட. (என்ன)

## 15

ராகம் காபி—தாளம் ரூபகம்.

பல்லவி.

என்ன தாமஸம் உனக் கென்ன தாமஸம்.

சரணங்கள்.

வன்னமயிலேறி கன்னல் மொழி வள்ளி
தன்னுடனே வந்து தாஸனை காத்திட. (என்ன) 1

கையில் தனம் இல்லையோ கருணை வரவில்லையோ
அய்யனே உனக்குற்ற அடிமை நான் அல்லவோ. (என்ன) 2

---

## 16

ராகம் அடானா—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஏனிந்த கோபம் என்ஸ்வாமி மெத்தநினைத்துனை எந்தன் மீதினிலே
உமக்கேனிந்த கோபம் என்ஸ்வாமி.

அனுபல்லவி.

வீணாகவே இந்தப் பாரினில் பிறந்து
பேணுவாரில்லாத பேதையான என்மேல். (ஏனிந்த)

சரணங்கள்.

தோளில் வளையல் சுமந்து விற்றீரென்று —
ஊரெங்கும் சொன்னேனோ.
குறத்தோகை மாது வாயால் எச்சுக் கேட்டு வந்த —
பேச்செல்லாம் சொன்னேனோ
கோலூன்றியே கிழக்கோலமாய்த் திரிந்ததை
பாரினிலே பலர் அறிய சொன்னேனோ. (ஏனிந்த) 1

தமயனுக்கு மணம் செய்ய தனமில்லாமல் —
தரணியில் நின்றதுவும்

குமரனே நீயிப்போ குறக்குலத்தில் சென்று —
குறப்பெண்ணை கொண்டதுவும்
அருமையாய் உனைப்பெற்ற ஹரனும் பிக்ஷாண்டியாய்
அவனியில் இரந்துண்ட குறைவெல்லாம் —
சொன்னேனே (ஏனிந்த) 2

வலச்சி பெற்ற பாலன் என்று நான் உந்தனை —
நகைத்துச் சொன்னேனே
இடைச்சி வீட்டில் உன் அம்மான் வளர்ந்ததை —
விரித்துச் சொன்னேனே
குடிச்சு பால் தயிர் இடைச்சி கைமத்தால்
அடிச்சடிபட்ட குறச்சல் சொன்னேனே. (ஏனிந்த) 3

---

17

ராகம் மோஹனம்—தாளம் ஆதி.

பல்லவி.

ஏனிந்த நித்திரை செய்கின்றீர் வேலரே நீர்
ஏனிந்த நித்திரை செய்கின்றீர்.

அநுபல்லவி.

வேதன் முதல் விண்ணோர்கள் யாரும் புகழும்-திரு
சிலைவாயில் இருதேவிபருடன் கூடி. (ஏனிந்த)

சரணங்கள்.

தேவஸேனாதிபதியாகக் கயிலை நின்று
திருவடி நோக வந்த இளைப்போ,
பாபிக்ரௌஞ்சனையும் மாயத்தையும் அழித்து
வீரவான்களை காத்த இளைப்போ,

மாயமாபுரி தன்னில் காவல் ஸேனைகளை
வதைத்து அலுத்தீரோ;
வீரரும் அஸுரரும் கோர யுத்தம் செய்ததை
பார்த்து அலுத்தீரோ,
தாரகனை வதைக்க தேரின் மிசை அமர்ந்து
வீரர்கள் சூழ வந்து மாயமாபுரி என்னும்,
பாரியான நகர் இடித்த வருத்தமோ
தாரகனை போரில் மடித்த வருத்தமோ: (ஏனிந்த) 1

ஸிம்ஹவக்தரன் சிரசை சேதித்து அவனுடன்
வர்மயுத்தம் செய்த களையோ,
தர்மகோபன் வஜ்ஜிரபாகு, அக்னி முகனை
ஸம்ஹரித்து வந்த களையோ,
வெல்ல முடியா அந்த அஸுர ஸேனைகளை
விழியால் எரித்த பெரும் களையோ,
சொல்லுக்கடங்கா சூரன் பொல்லாத மாயங்களை
போக்கினதால் பெரும் களையோ,
அல்லல் செய்த சூரனை கொல்லவென்றே ரதத்தில்
வில்லேந்தி மயிலின் மேல் உல்லாஸமாக நின்று,
ஸேனை யானைகளை சிதைத்த வருத்தமோ
சூரனாதியரை வதைத்த வருத்தமோ. (ஏனிந்த) 2

சந்துவராசன் தபஸுக்குகந்து வரம் கொடுத்து
மகிழ்ந்தவன் வாசல் காத்தீரே,
அதிசயம் மொழுங்கி வரும் யானையை வதைத்தந்த
மாமுனி தன்னை காத்தீரே,
நீரில் விழுந்தெழுக்க நினைந்த பக்தனை அன்று
பாலனாய் வந்து ரக்ஷித்தீரே,
மாது சிரோன்மணி பாலை முருகாபாய்க்கு
மறுகரம் தந்து ரக்ஷித்தீரே,
அது போலே வாரும் பன்னிரு கண்ணால் பாரும்
மனத்துயரம் தீரும் நான் கோரும் வரம் தாரும் தாரும்—
என் ஸ்வாமி

லெக்ஷணம் வாய்ந்த பெரும் பக்ஷியாம் மயிலேறி
இக்ஷணமே எந்தனை ரக்ஷியும் எழுந்திரும். (ஏனிந்த) 3

---

18

ராகம் ஆனந்தபைரவி—தாளம் சாப்பு.

பல்லவி.

ஏனிந்த வர்மம் அய்யா எந்தன் மீதில்
இன்னமும் இரங்காததேதோ ஏதோ.

அநுபல்லவி.

மாநிலம் தன்னில் இனருய் நின்று மயங்கியே பரிதவித்திடும் என் மேல்
காரணமா மயில் வீரனே கருணை கர வடி வேலனே குக
திருமலைப் பரி பாலனே ஞான சீலனே என் மேல், (ஏனிந்த)

சரணம்.

வந்தென்னைக் காராயோ எந்தன் மன ஸந்தேஹம் தீராயோ
பந்த பாசம் அறுத்தென்னை உந்தன் பாதம் தன்னில்— வைத்தாண்டருள் செய்ய
இந்த வேளை தருணம் அல்லவோ இனி எனக்கருள் புரிய— ஒண்ணாதோ
மனதிரங்கி இனி எனக்கருள் புரிய ஒண்ணாதோ, (ஏனிந்த)

---

19

ராகம் பரஸ—தாளம் ஆதி.

பல்லவி.

ஏனின்னம் தாமஸமோ—ஏழை என் துயர் தீர்க்க
தீனதயாளனே ஸ்ரீ—ஜெயந்தி புர வாஸனே
ஏனின்னம் தாமஸமோ.

சரணங்கள்.

கானகம் தன்னில்ச் சென்று தேனும் தினைமா உண்டு
மான்விழி வள்ளி தன்னை மணம் புரிந்த நாதனே.(ஏனின்னம்)1

ஆறுமுக வேலனே அமரர் தொழும் சீலனே
தானை மயில் வீரனே கலியுக வரதனே. (ஏனின்னம்) 2

---

## 20

ராகம் கேதாரம்—தாளம் ஏகம். (திசிரநடை)

பல்லவி.

ஏனின்னம் பராமுகம் ஐயா—வேல் முருகையா
ஏனின்னம் பராமுகம் ஐயா.

அனுபல்லவி.

மாநிலம் தன்னில் தினனும் என் மேல் பாலஸுப்ரமண்ய—
வேலனே உந்தனுக். (ஏனின்னம்)

சரணங்கள்.

வேலனே உன்னிரு தாளிணை காணாமல் பாலன்-கதறுகின்றேன்
சீலனே வள்ளி லோலனே வடி வேலனே சிவ பாலனே
உனக். (ஏனின்னம்) 1

மெத்தச் சிறியேன் நான் சப்தம் இடுவது செற்றேனும்—
கேழ்க்கலையோ
நித்தியனே சுத்த முக்தனே பர சக்தி லோகாம்பிகை பாலனே
உந்தனுக். (ஏனின்னம்) 2

21

ராகம் சுருட்டி—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஏன் உனக்கிந்த மோடியோ சொல்லும்
எந்தன் மேலையா—ஷண்முகா
ஏன் உனக்கிந்த மோடியோ சொல்லு ... ந்தன் மேலையா.

அனுபல்லவி.

பாதிப்பிறை அணிந்த பரமன் பணிய
பரிவுடன் மொழி பகரும் வேலனே. (ஏன்)

சரணங்கள்.

கானகம் தன்னில் வேடனுய்ச் சென்ற—
கதையைச் சொன்னேனோ
சேற்றும் கானம் அன்றியில் வள்ளி மாதுடன் செய்த—
வாதைச் சொன்னேனோ
ஆனாலும் உனைப் போல் ஒருவர் இவ் அவனியில்க்காணேன்
மிகதீனனை என் மீதினில் சிறிதேனும் தயவில்லாமல்—
இப்படி. (ஏன்) 1

அருமறைகளும் தேடிக் காணாத அப்புஜ பாதா
... முனி ஸ்துதிக்கு உகந்தருள் செய் ...
தருணம் இதெனக்கருள் செய்வாய் தவ ...
திருமலை தன்னில் சிறந்து மேவிய—
செல்வமே சிவ ... தா. (ஏன்) 2

---

22

ராகம் ஹம்ஸத்வனி— ... ஆதி.

பல்லவி.

கருணை ஸாகரா கலி தீர்த்தருள் செய்-கருணை.

அனுபல்லவி.

கருணை ஸாகரா சலிதீர்த்தருள் செய்
தருணம் இது தயவாய் இப்போது. (கருணை)

சரணங்கள்.

சிறியேன் நான் கோடி பெரும் பாதகம்
அறியாமலே செய்திருந்த போதும்
முருகனே நீர் க்ருபையாய் இன்னேரம்
பெரும் குறை தீர வருவாய் மயில் மேல். (கருணை) 1

ஆல்காலம் உண்டு அமரரை காத்த
நீலகண்டருக்கு நிர்மலப் பொருளை
ஓதிய குரு நாதனே லோக
நாயகி மகிழ் பாலனே இன்னேரம். (கருணை) 2

---

23

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

கழலிணை தா பழனி வேலா.

சரணங்கள்.

மழை விடை மேவும் மலை மாது பாகன்
தொழ ஓர் மொழி பகறிய வேலா. (கழலிணை) 1

மாதுலம் கனிக்காகப் பிணங்கி—கோபம்
கொண்டார் போல் ஜாலம் செய்த உன். (கழலிணை) 2

---

24

ராகம் பியாக்—தாளம் ஆதி.

பல்லவி.

காலன் வந்தால் பொல்லாதவன் விடமாட்டான்—
வந்தால் விடமாட்டான்,
வடி வேலன் பெயர் சொல்வார் கிட்டே வரமாட்டான்.

சரணங்கள்.

மேலான காமதேனு மற்றும் உள்ள ரெத்னங்கள்
ஸ்வாதீனமாகத் தன் ஊரில் இருந்தாலும்
கோலாகலமாய் இந்த பாரினில் வாழ்ந்தாலும்
குவலயத்தில் மன்னி முடிதரித்திருந்தாலும். (காலன்) 1
வெண்ணெய் தயிர் பாலுடன் வேணதெல்லாம் உண்டாலும்
கண் இமை கொட்டாமலே காத்துக் கொண்டிருந்தாலும்
பொன்னால் அலங்கரித்து போஷித் திருந்தாலும்
வன்னச் சேலை உடுத்தி வரிசையாய் இருந்தாலும். (காலன்) 2
மாடியின் மேல் மாடி கட்டி இருந்தாலும்
கோடி சிபாயிகளை காவல் வைத்திருந்தாலும்
மாடு மனை மக்கள் மற்றோர் இருந்தாலும்
கூடைகூடையாய் தனம் குவித்து வைத்திருந்தாலும் (காலன்) 3
உத்தமமான ஜென்மம் இத்தருணம் கிடைத்தும்
புத்தி கெட்டு அலைந்து பொழுதை போக்கி விடாமல்
சக்தி வடிவேலன் சரணம் தனைப் பணிந்து
சாகாமல் வரம் பெற ஸமயம் இது பாருங்கள். (காலன்) 4

---

25

ராகம் ஆரபி—தாளம் ஆதி.

பல்லவி.

கானகக் குறப் பெண்ணை கடி மணம் செய்து நின்றாய்
ஸ்கந்தனே உனக்கழகோ.

அனுபல்லவி.

வானகத் அமரரும் வணங்கி பணிபுரியும்
வடிவேலனே இதென்ன சிறு பிள்ளைத்தனமாக. (கானக)

சரணம்.

ஜாதி முறைமையில் பெண் கிடையாதோ—
உந்தன் தாம் என்ன கேவலமோ.

ஏதையா உனக்கென்ன வயது ரெம்பாச்சுதோ—
இது என்ன விளையாட்டோ
ச்ரேஷ்ட ப்ராதாவுக்கின்னம் திருமணம் செய்யவில்லை
சிறு பாலன் உனக்கின்னம் பால் குடி மாறவில்லை. (கானக)

---

## 26

*ராகம் ஹிந்துஸ்தானி தோடி—தாளம் ஏகம்.*

பல்லவி.

கானக் குறவர் மகிழ் மாது கன்னிகை உடனே மயில் மீது
நீ தானே வரத் தாமஸம் ஏது ஷண்முகனே இதென்ன வாது.

சரணங்கள்.

தேவர் முனிவர் திகைத்தோடு தியவன் சூரன் குலத்தோடு
போரில் மாய்த்தாய் திரத்தோடு பாரில் இனியார் உனக்கீடு.

கோழிக் கொடியும் குதித்தாட கோல மயிலும் நடித்தாட
தேடிப் பணிந்தோர் பிணிவாட சிறியேன் எந்தன் துயர் ஓட.

செற்றே க்ருபையுடன் பாராயோ
உன் திரு உளம் இரங்கிக் காராயோ
ஒரு முத்தம் தர நீ வாராயோ முருகா என் குறை தீராயோ.

கொஞ்சி என்னுடன் விளையாடாயோ
உன் கிஞ்சுக மொழியை கூறுயோ
என் ஸஞ்சலம் தீர்த்து காராயோ
உன் தாஸன் என்றொரு பெயர் தாராயோ. (கான) 4

---

## 27

*ராகமாலிகை—தாளம் சாப்பு.*

பல்லவி—ராகம் கல்யாணி.

குமர குரு பரனே சிறியேனுக் அருள் புரிவாய் இன்னே; மே
ஏ செல்வா—குமர குரு பரனே.

அனுபல்லவி—ராகம் மோஹனம்.

கருணைக் கடலே உன் சரணம் அடைந்தேன் இந்த
தருணம் எந்தனை காக்க தயை செய் இன்னேரமே,
கா—தாப கதாப கபாகரிஸா ஸதஸா பதஸரி—கா
காரிக ஸரிகப தாபத கபாதஸா பதஸா பதஸரி
காரிஸாநித ரீஸாநீதாபம ககமரி. (குமர)

சரணம்—ராகம் சஹானா.

மெத்தச் சிறியேன் மேல் இத்தனை வர்மங்கள்
அத்தனே செய்வது உத்தமமாகுமோ.

ராகம்—பைரவி.

நித்திய கல்யாணனே உன் சித்தம் இரங்கியே
சக்தி லோகாம்பிகை பாலனே இன்னேரமே,
ரீ—காரி கமப பமகரிஸா நிஸ ரிசமகரி கம—ரீ
பதாப பமகரி கமப மபதநிஸா பதநிஸ்ரி
கர்ஸாநித ரீஸாநிதபம ககமரி. (குமர)

—:[*]:—

## 28

ராகம் கமாஸ்—தாளம் சாப்பு.

பல்லவி.

கோபம் இனி செய்யலாகுமோ குமரேசனே எந்தன் மீதினில்

அனுபல்லவி.

ஏதும் அறியாத பேதையான என் மீதினில் வடி வேலனே—
இந்த (கோபம்)

சரணம்.

பன்னிருகை வேலையா என் பால் இரங்காதேதையா
சின்னஞ் சிறுவன் மீதில் இன்னம் வாது செய்வதும் ஏனையா
உன்னை அன்றி என்னை காக்க வேறொருவர் உண்டோ—
சொல்லையா இந்த. (கோபம்)

## 29

ராகம் பூரிகல்யாணி—தாளம் ஆதி.

பல்லவி.

கோபுர தெரிசனமே எந்தன் சோக விமோசனமே—ஸ்கந்தன்.

சரணங்கள்.

பார் புகழும் திரு—சிறலைவாய் தன்னில்
தேவி லோகாம்பிகை பாலன் வஸிக்கும் திரு. (கோபுர) 1

சஞ்சலம் நீர்த்தன்பர்க்கஞ்செலென்றருள் செய்யும்
குஞ்சர வதனன் ஸஹோதரன் வஸித்திடும்.(கோபுர) 2

சூரனை வதைத்தந்த தேவர் பயம் தவிர்த்த
தீர கருணா கர வேலன் வஸிக்கும் திரு. (கோபுர) 3

பவமென்னும் நரகில் விழாமல் அன்பரை காக்கும்
சிவ ஸுப்ரமண்ய குரு தேசிகன் வஸித்திடும் (கோபுர) 4

---

## 30

ராகம் நாட்டை—தாளம் ஆதி. (மத்தியில் எடுப்பு)

பல்லவி.

கௌரி பால வேலா வருவாய்
தர்மா குண சீலா—கௌரி பால வேலா வருவாய்.

சரணங்கள்.

ஐங்கரனுக் இளைய ஸ்கந்த வடி வேலா
சங்கரன் ஸுதனே நீ எந்தனுக்கருள் செய்ய.(கௌரி) 1

வஞ்சியருடன் கூடி கொஞ்சி மயிலேறி
அஞ்சாதே உந்தனை ஆள்க்கொள்வேன் என்று. (கௌரி) 2

கால தூதர்கள் வந்து கூவி அழைக்கு முன்
லோகாம்பிகை பாலனே கோல மயிலேறி. (கௌரி) 3

---

## 31

ராகம் பியாக்—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஸகியேஎன்னசெய்குவேன்எந்தன்ஸாமிஇன்னம்வரகாணேனே

சரணங்கள்.

ஸுகியே செந்தில் பதியில் வஸிக்கும்—
தோகை மா மயில் வேலனை
காணக் கண்கள் தேடு தடி மனங் கரைந்து வாடு தடி
வாராரோ என்னைக் காராரோ—
கண்ணால் பாராரோ துயர் தீராரோ, (ஸகியே) 1

லோகாம்பிகை மகிழும் பாலன்—
இரு தேவியர் மனம் மகிழும் லோலன்
பால ஸுப்ர மண்ய வேலன் பேதை எந்தன் காதல் தீர
வருவாரோ சேர்வை தருவாரோ—
மனம் மகிழ்வாரோ வரம் அருள்வாரோ. (ஸகியே) 2

---

## 32

ராகம் முகாரி—தாளம் ஆதி.

பல்லவி.

சங்கரன் ஸுதனே எனக் அருள் தந்திடாய் குகனே,

அநுபல்லவி.

சங்கை அற்ற விநோதனே ஸுக போதனே ஜெக நாதனே சிவ

சரணங்கள்.

பார்வதி பாலா ஆ உமை பார்வதி பாலா
பக்தர்கள் துயர் விடுக்கப் பாரினில் அவதரித்த
சக்தி என்னும் ஆயுதத்தை பத்திரமாய் கைப் பிடித்தாய்
பார்வதி பாலா எந்தனைக் காரும் வடி வேலா
வீரனான சூரன் தன்னை போரினில் ஜெகித்து வந்த
தீரனே தெய்வானை மண வாளனே கருபா கரனே. (சங்க ரன்) 1

காலபய நாசா ஆ பொல்லா காலபய நாசா
வேலா வெகு லீலா கோலா கல லோகாம்பிகை பாலா
காலபய நாசா என்னைக் கண் பாரும் முருகேசா
ஸ்கந்த வடி வேலா உந்தன் செந்தாமரை பாதம் தன்னில்
ஸந்ததம் பணிந்தேன் எந்தன் வெந்துயர்கள் தீர்த்தருள்வாய்,

33

ராகம் ஆபேரி—தாளம் ஆதி.

பல்லவி.

தருமோ ஷண்முகனே தாமஸம் செய்தல்—இனமும் தருமோ

அனுபல்லவி.

குகராஜ உயிரெல்லாம் பரிபால நேசா
திருசீர் ஆலவாய் அரசாய் உரை ஈசா குமரேச உந்தனுக் இது

சரணம்.

அணுவாய் ஹரன் ஹரியாய் அயனும் அகில் அமுமாய்
அறிவாய் அறி உருவாய் சிவ குருவாய் வரும் நாதா
ச்ருதி எல்லாம் பரப்ரம்மம் குகன் என்று முறை இடுதே
தயையே புரியா வகை ஏதறியேனே தாஸரிடத்தில் வாது(தரு)

---

34

ராகம் கானட—தாளம் ஆதி.

பல்லவி.

தயை செய்குவாய் ஷண்முகா என் மீதில்
தமியேன் மன பெரும் ஆவல் தீர—தயை செய்குவாய்.

சரணங்கள்.

அருமறைத் தேடும் அரும் பொருளே உன்
சரண் புகுந்தேன் தருணம் இவ்வேளை. (தயை) 1
கும்பமுனிக் அருள் இன்பனே உன் பாதம்
நம்பினேன் என் மேல் அன்புடன் இப்போது.(தயை) 2
சிறியேன் என் மனத் துயரதை தீர்த்து
அருள் புரிய ஐயனே இன்னேரம். (தயை) 3

---

35

ராகம் ஸ்ரீ—தாளம் ரூபகம்.

பல்லவி.

தருணம் இதருள் செய்வாய் நல்ல தருணம் இதருள் செய்வாய்
கருணா கர முருகா குஹ சரவண பவ குஹ.

சரணம்.

பெரும் குறை தனைத் தீரு—எந்தன் பெரும் குறை தனைத் தீரு
சிறியேன் என் மேல் க்ருபை கூறு—
குமர குருபரனே குறமகளுடன் மயிலேறி. (தரு)

---

## 36

ராகம் பலஹரி—தாளம் ஆதி.

பல்லவி.

தெண்டம்விட்டேன் என்று சொல்லடீ ஷண்முகர்க்கு நான்
தெண்டம்விட்டேன் என்று சொல்லடீ.

அனுபல்லவி.

அண்டர்கள் தொழும் பாதனே தொண்டர்கள் மகிழ் நாதனே

சரணங்கள்.

லிங்கு நகர் தன்னில்ச் சென்று ஸ்கந்த முருகனைக் கண்டு
ஸ்தோத்ரம் ஸ்துதித்து நின்று எந்தன் துயரத்தை விண்டு. (தெ) 1

முக்தி அளிக்கும் பாதம் மூவர்கள் ஸ்துதிக்கும் பாதம்
சக்தி மகிழும் பாதம் உத்தமியே நான் முப்போதும். (தெ) 2

லீலா விநோதனே பால ஸுப்ர மண்யனே
சோலா கல வேலனே லோகாம்பிகை பாலனே. (தெ) 3

---

## 37

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

தையலே அய்யனே காணுவிடில் மனம் உய்யும் வகை ஏதடி.

சரணங்கள்.

வையகம் புகழ்ந்திடும் வடி வேல் முருகனே
வள்ளி தெய்வானையுடன் புள்ளி மயில் மேல் வர. (தையலே) 1

சூரன் குல காலனே தேவர்க்கனு கூலனே
லோகாம்பிகை பாலனே கோல மயில் மேல் வர. (தையலே) 2

38

ராகம் ஹிந்துஸ்தானி பியாக்—தாளம் ஏகம்.

பல்லவி.

தொழுதேன் என்று துருஸாய் சொல்லி அழைத்து வா போடி.

சரணங்கள்.

பழுத்தறச் செந்தில் பதி தன்னில் வாழ்ந்திடும்—பைங்கிளி
வள்ளி லோலனை—ஸகியே பைங்கிளி வள்ளி லோலனை
பார் புகழும் உலகம்மை மகிழ்ந்தின்றெடுத்த—பால
ஸுப்ர மண்ய வேலனை—ஸகியே பால ஸுப்ர மண்ய வேலனை.

தாயை பிரிந்த கன்றை போலவே மிக—தயங்குகிறாள்
என்று சொல்லி—ஸகியே தயங்குகிறாள் என்று சொல்லி
தீயாத் துபரம் செற்றும் தாங்காமையால் மனம்-மயங்குகிறாள்
என்று சொல்லி-ஸகியே மயங்குகிறாள் என்று சொல்லி.(தொழு)

கண் இழந்த அந்தகன் போலவே மிக—கதறுகிறாள்
என்று சொல்லி—ஸகியே கதறுகிறாள் என்று சொல்லி
இன்னேரமே அவரை வன்ன மயில் ஏறியே—கன்னியர்
இருவர்களுடன்-ஸகியே கன்னியர் இருவர்களுடன். (தொழு)

39

ராகம் காம்போதி—தாளம் ஆதி.

பல்லவி.

நாதா எந்தன் மீதில் க்ருபை வாராதேதையா
நீத—அகற்றும் தேஜோன் மய தேசிகா குகா
நாதா எந்தன் மீதில் க்ருபை வாராதேதையா.

சரணங்கள்.

கருணை நிதி என்று உன்னை கத்துமே வேதம்
தருணம் க்ருபை செய்ய என்ன தாமஸம் ஐயா. (நாதா) 1

பக்த ப்ரியன் என்று உன்னை பகருதே வேதம்
சித்தம் இரங்காததென்ன செய்கை சொல்லையா. (நாதா) 2

## 40

ராகம் மோஹனம்—தாளம் ஆதி.

பல்லவி.

நீர் கெதி அன்றி எனக்கார் கெதியும் உண்டோ—ஷண்முகா.

அனுபல்லவி.

பார் தன்னில் எந்தன் மீதில் பக்ஷம் வைத்து ரெக்ஷிக்க. (நீர்)

சரணங்கள்.

கானக் குற மாது தன் மீதினில் காதல் கொண்டு
கான மயில் வீரனே நீர் கால் நடையாய் நடந்து
தேனும் தினை மா உண்ட வேல் முருகையனே. (நீர்) 1

லோகாம்பிகை பாலனே காருண்ய க்ருபாளனே
தாமரை தாளனே ஷண்முக வேலனே
மோகல மயில் வாகனனே பால ஸுப்ர மண்யனே. (நீர்) 2

---

## 41

ராகம் கமாஸ்—தாளம் ஆதி.

பல்லவி.

பசி பசி என்று வந்தார் வனம் தன்னிலே
பசி பசி என்று வந்தாரே.

அனுபல்லவி.

அசதி மிகுந்தவர் போல் ஆயாஸத்தால் மெலிந்து. (பசி)

சரணங்கள்,

கோல் பிடித்து தள்ளாடி குழைந்து குழைந்து வாடி
பூ மகள் வள்ளி தன்னை பொருந்த வேலரும் நாடி. (பசி) 1

வள்ளி அருகில் வந்து துள்ளி பசியால் நொந்து
அள்ளி அன்னம் இட்டால் என் ஆவி தரிக்கும் என்று. (பசி) 2

கண்ணை இருட்டுதென்தன் கருத்தை மயக்குறது
என்ன மாகிலும் கொஞ்சம் எனக்குக் கொடுங்களென்று (பசி) 3

கோல மயிலில் ஏறி சூரனை வதம் செய்த
பால ஸுப்ரமண்யன் காலால் நடந்து மெலிந்து. (பசி) 4

## 42

ராகம் ஜாங்குஜாவளி—தாளம் ஆதி.

பல்லவி.

பாராததேன் முருகா இன்னமும் பாராததேன் முருகா.

அநுபல்லவி.

தீராததேன் என் துயர் தீராததேன்
தீன ஜென ரக்ஷகனே ஹரனே குஹனே. (பாரா)

சரணம்.

தேகம் தளர்ந்து போதமும் கைந்து காண அலைந்தேன்
நாதா சூதா இது சூதா இது
தேவி லோக நாயகி ஸ்ரீ மகிழ் பாலகனே. (பாரா)

## 43

ராகம் சங்கராபரணம்—தாளம் ஏகம்.

பல்லவி.

பார் புகழும் வடி வேலவனே மூவர் தொழும் மயில் வாகனனே

சரணங்கள்.

க்ருபையுடனே க்ருபையுடனே வருக வருகவே
சம்பு புத்ர அம்பு வக்தர வருக வருகவே
நிசாசரர் குல கலக விசாகா என் துயர் தவிற விரைவில் வருகவே

மயிலின்மேலேறி மயிலின்மேலேறி வருக வருகவே
மனைவியர் இருவருடன் வருக வருகவே
ஸுரா ஸுரர் தொழும் வேலனே சரா—சர
பரி பாலனே சரவண பவனே. (பார்) 2

44

ராகம் தன்யாசி—தாளம் ஆதி;

பல்லவி.

பார்வதி பாலா பக்தர்க்கனு கூலா பார்வதி பாலா.

அனுபல்லவி.

தேவர் சிறை விடுத்த தேவாதி தேவா
மூவர்க்கும் முதல்வா மோக்ஷ ஸொரூபா. (பார்)

சரணங்கள்.

வள்ளி மணாளா வானோர் தொழும் சீலா வள்ளி மணாளா
வெள்ள ரெஷபம் ஏறும் வித்தக நாதன் பாலா
புள்ளி மயில் ஏறி வாரும் வடி வேலா. (பார்) 1

தீனதயாளா தெய்வ யானை லோலா தீனதயாளா
கால பயம் தவிர்க்கும் கருணா க்ருபாளா
லோகாம்பிகை பாலா கருணை செய்வாய் வேலா. (பார்) 2

45

ராகம் பியாக்—தாளம் ஆதி.

பல்லவி.

பால ஸுப்ர மண்ய இந்த ஜாலம் செய்வதேனையா.

அனுபல்லவி.

ஞான மூலனே கலியுக லீலனே நர்ச் சீலனே
சீலனே என் தீனதை அறியாது போல் இப்பார் தன்னில். (பா)

சரணம்.

ஞான யோகி த்யான ஹ்ருதய வாஸனே ஸுரேசனே
தேவி லோக நாயகி மகிழ் பாலனே ஸ்ரீ வேலனே. (பால)

—:[*]:—

46

ராகம் ஆரபி—தாளம் ஆதி.

பல்லவி.

பெற்ற பிள்ளை மேல் உனக் இத்தனை வர்மங்கள்
ஏன் வந்ததோ சொல்லும் முத்தையா.

அநுபல்லவி.

செத்துப் பிறக்கும் வழி தப்பி பிழைக்க அறியா
மெத்தச் சிறியேன் மேல் சித்தம் இரங்காமல்.(பெற்ற)

சரணங்கள்.

அன்னை உதிரம் என்னும் அரும் சிறையில் பட்டு
உன் நன்னயம் காணாமல் நாய் போல் அலைகின்றேன்
சின்னஞ் சிறியேனுக் இன்னேரம் க்ருபை செய்ய
வன்ன மயிலேறி வாரும் முருகையா. (பெற்ற) 1

திருவடியைக் காணாமல் சுற்றிடும் எந்தன் மேல்
முருகனே உந்தன் திரு உள்ளம் இரங்காதோ
பெரிதான அபசாரம் பிள்ளை செய்தாலும் பெற்றோர்
வேறு வெறுப்பார்களோ பிரபுவே உன் போலுலகில். (பெற்ற)

மாங்கனிக்காய் அன்று நீ தாய் தந்தையை வெறுத்து
காவி வஸ்தரம் தரித்து கடுகி நடந்த போது
ஞானப் பால் தந்த லோக நாயகி வந்து உன்னை
வாரி எடுத்தணைத்து வாவென்றழைக்கலையோ. (பெற்ற) 3

47

ராகம் காபி—தாளம் ஆதி.

பல்லவி.

மனமே குக ஸ்மரணம் அல்லாது
மார்க்கம் இக்கலியுகமீதோ—மோன வீடேற மனமே.

அநுபல்லவி.

தினம் வீணாய் திரிகிறாய் விஷய
வெவ்விஷம் தன்னில் ரஸம் வருமோ—மதி இழந்த.(மனமே)

சரணம்.

தாரம் தனம் கூறும் பந்து ஸுதன் தரணியில் அழிபவயே
ச்ருதியாதிகள் சொல்லிடும் அவை வழியே
குமர குரு பரன் சொன்ன மொழியே
நீ அநுதினம் ஸ்மரிப்பவையே—பெரு கெதியே. (மனமே)

## 48

ராகம் சக்ரவாகம்—தாளம் ரூபகம்.

பல்லவி.

மன வருத்தம் ஒரு பெரும் வருத்தம்.

அனுபல்லவி.

தினமும் அன்பர்கள் தொழுது போற்றும்
குமரன் வாராத குறைவால் உண்டான. (மன)

சரணங்கள்.

அன்னை உதிரத் திருந்த வருத்தம்
அவனியில் வந்து பிறந்த வருத்தம்
முன்ன வினையினால் நோகும் வருத்தம்
முருகன் வாராத குறைவால் உண்டான. (மன) 1

பக்தி வழி அறியாத வருத்தம்
பாமரரோடுறவாடும் வருத்தம்
நித்ய ஸுகத்தை இழந்த வருத்தம்
நிமலன் வாராத குறைவால் உண்டான. (மன) 2

முக்தி நெறி அறியாத வருத்தம்
மூடர்களோடுறவாடும் வருத்தம்
சக்தி லோகாம்பிகை பாலன் வாராததோர்
தாகத்தினால் பெரும் சோகத்தினால் வந்த. (மன) 3

---

## 49

ராகம் ஹிந்துஸ்தானி காபி—தாளம் சாப்பு.

பல்லவி.

முருக நாமம் ஜென்ம ரகித-மா-மே—இதம் பெறலாமே.

சரணங்கள்.

பிறவித் துயர் தவிர்த்து பேரின்பம் தந்தருள
இதர தெய்வம் வேறுண்டோ என் மயங்குறாய் மனமே. (இத

கலைகள் உணர வேண்டாம் கர்மங்கள் செய்ய வேண்டாம்
சரவண பவ நாமம் ஸந்ததம் சொல்வாய் மனமே. (இதம்) 2
காயத்தை நம்பி இந்த மாயா வாழ்வினில் முழுகி
எமனார் போகாமலே வேலன் பாதம் பணிவாய். (இதம்) 3
தீர்த்தங்களாட வேண்டாம் ஜெபங்கள் வ்ருதங்கள் வேண்டாம்
கார்த்திகேயன் நாமமே கைவல்யமாமே. (இதம்) 4

---

## 50

ராகம் பியாக்—தாளம் ஏகம்.

பல்லவி.

முருகா இது தருணம் வருவாய் முருகா.

சரணங்கள்.

கார் குழல் வள்ளி தன் மார்பின் விஸ்தாரத்தால்
தேக முழுதும் சிகப்பாக நின்றழகா. (முருகா) 1
பார் புகழ அன்று சூரனை வதைத்தோனே
யாழ் நகர் மேவி வளர் வேலனே மயில் மேல் (முருகா) 2

---

## 51

ராகம் காம்போதி—தாளம் சாப்பு.

பல்லவி.

மோனம் விட்டோர் மொழி சொல்லையா
ஞான குருபர வேலையா
மோனம் விட்டோர் மொழி சொல்லையா.

சரணங்கள்.

தீனனும் சிறு பாலனுன என் மீதினில்
தவ சீலனே வடி வேலனே தயவில்லையா. (மோனம்) 1
இரவு பகல் அறியாமலே நின்று கதறுவதெல்லாம்
முருகனே உந்தன் செவிகளில் புகவில்லையா (மோனம்) 2
சூரன் குல ஹத காலனே உயர் வானவர்க்கனுகூலனே
லோகாம்பிகை அருள் பாலனே க்ருபை வல்லையா (மோ) 3

## 52

ராகம் தோடி—தாளம் ரூபகம்.

பல்லவி.

ராஜ வேலர் இவர் தான்டி.
தேனே ஸ்ரீமானே ராஜ வேலர் இவர் தான்டி.

சரணங்கள்.

தேசாதி தேசம் புகழ்ந்திட பொய்கையில்
தேஜோன் மயமாக வந்துதித்தாடி
க்லேசங்களைச் சுட்டு நாசம் செய்வாரடி
க்ருபையோடு-மா-மயிலேறியே வரம் அருள் வருவாரடி (ராஜ) 1

இவர் வந்தும் நமக்கென்ன தாழ்மை உண்டோடி
ஈரேழு லோகரும் நமக் அடிமை அடி
ஸந்தோஷமாய்ச் சென்று சரண் பணிவோம் வாடி
தடை ஏதடி குறை தீர்த்திட க்ருபை கூர்ந்திட நின்றாரடி (ராஜ)

தாஸர்களை காத்து ரக்ஷி செய்வாரடி
நீசர் மேல் கோபித்து சிக்ஷை செய்வாரடி
பேசப் பேச இவர் பெருமை பெரிதடி
ஈசன் அருள் பாலன் குண சீலன் வள்ளி லோலனடி. (ராஜ) 3

---

## 53

ராகம் சங்கராபரணம்—தாளம் ஆதி.

பல்லவி.

வந்தென்னை காத்தருள்
வள்ளி தெய்வானையுடன் வந்தென்னை காத்தருள்.

சரணங்கள்.

ஸாங்கர வேல் பிடித்து சூரன் சிரம் துணித்த
தீரனே தீரனே தீரனே இந்த வேளை. (வந்தென்னை) 1
சந்திர சடாதரர்க்கு முந்திய குருவான
ஸ்கந்தனே ஸ்கந்தனே ஸ்கந்தனே இந்த வேளை. (வந்தெ)

## 54

ராகம் கமாஸ்—தாளம் சாப்பு.

பல்லவி.

வரம் அருளாததேனோ
வள்ளி லோலனே வரம் அருளாததேனோ.

சரணங்கள்.

பரம் என்று உனை நம்பி கதறிடும் எந்தன் மேல்
கருணை இல்லாதார் போல் காங்கேயனே இன்னமும். (வரம்) 1

தீனரை காப்பேன் என்று திருக் கையில் வேலும் கொண்டு
பார் புகழவே நின்ற பால ஸுப்ரமண்யனே. (வரம்) 2

---

## 55

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

வருவாய் ஷண்முகா என் முன் வருவாய் ஷண்முகா.

சரணங்கள்.

வருவாய் ஷண்முகா இருவினை தீர
தருவாய் அமிழ்தம் தமியேன் முன் அன்பாய். (வரு) 1

ஸ்கந்தனே எந்தனை கருணையுடன் தேடி
இரு மங்கையருடன் கூடி மயிலின் மேல் ஏறி. (வரு) 2

கோல மயிலில் ஏறி குறமகளுடன் கூடி
பாலன் எந்தனை தேடி சீக்கிரமாக ஓடி. (வரு) 3

---

## 56

ராகம் கேதாரம்—தாளம் ஏகம்.

பல்லவி.

வருவாரோ ஸகி சொல்லடி
வடி வேலன் வருவாரோ ஸகி சொல்லடி.

அனுபல்லவி.

கொடியேன் கண் காணவே நொடியில் மயில் ஏறி. (வரு)

சரணங்கள்.

திங்கள் பூனை செஞ்சடையன்
சங்கரன் பாலன் செங்கை தன்னில் வேல் பிடித்து
மங்கையர் இருவருடன்—
என் குறைகள் தீர்த்தருள இங்கே. (வரு) 1

சூரன் குல காலன்
ஸுப்ரமண்ய வேலன் காருண்ய க்ருபா சீலன்
பாரினில் என் காதல் தீர—
லோகாம்பிகை பாலனிங்கெழுந்து. (வரு) 2

——:[*]:——

57

ராகம் காபி—தாளம் ஏகம்.

பல்லவி.

வருவாரோ வரம் எனக் அருள்வாரோ.

அனுபல்லவி.

தருவாரோ சரணக் கமல ஸேவை, (வரு)

சரணங்கள்.

சிறியேன் தன் துயர் தவிர்த்தருள் புரிய
மயிலேறி மனைவியருடன் கூடி. (வரு) 1

ஜயந்தி மா புர நகர் உறை வாஸன்
குமரேசன் கருணை புரியும் ஈசன். (வரு) 2

———

58

ராகம் காபி—தாளம் ரூபகம்.

பல்லவி.

வர்மம் ஏதையா என் மேல் வர்மம் ஏதையா.

சரணங்கள்.

தர்ம ஸொரூபா உன் அண்டையில் வந்து
எந்தன் பரி தாபம் சொல்லியும் இந்த. (வர்மம்) 1

கூவிக் கூவி நாவுலர்ந்ததே செற்றும்
ஏதென்று கேட்க்காமலே உமக் இந்த. (வர்மம்) 2

உன்னை அன்றி வேற் கெதி எனக் உண்டோ
ஷண்முகனே இன்னம் சோதித்தல் நன்றோ. (வர்மம்) 3

பக்தன் படும் கஷ்டம் தீர்த்தருள் செய்வாய்
சக்தி லோகாம்பிகை பாலனே இந்த, (வர்மம்) 4

---

## 59

ராகம் சங்கராபரணம்—தாளம் த்ருபுடை.

பல்லவி.

வள்ளிக்கி வாய்த்த குகனே
வடி வேல் முருக சரவணபவனே வள்ளிக்கி வாய்த்த குகனே.

சரணங்கள்.

புள்ளி மயில் வாகனனே
கள்ளர் அவுணரை வதைத்த நற்குணனே
வள்ளல் தொழ அருள் பவனே
க்ருபா வெள்ளம் பெருகிட வரும் குருபரனே, (வள்ளி) 1

தாரகம் வேறில்லைத் தானே
தமியேன் உந்தன் உளச் சயல் அறியேனோ
கோதில்லாத குற மானே
கூடி அணையத் திருக் கோலம் கொண்டோனே. (வள்ளி) 2

---

## 60

ராகம் சங்கராபரணம்—தாளம் ரூபகம்.

பல்லவி.

வாசலில் வந்து நிற்பதேது வழக்கம் போல் வாலாம்
எப்போதும் வந்த வழக்கம் போல் வாலாம்.

அனுபல்லவி.

தேசம் புகழும் செந்தூரில் வாழும்
செல்வரே நான் மிக மையல் கொண்டேன் காண, (வாச)

சரணங்கள்.

குறத்திமருந்தின் கிறக்கினாலே வெறுப்பென்மீதில் கொண்டீரோ
நல்ல திருத்தமாம் தினைப்புனத்து நிழலில் படுத்துறங்கி வந்தீரோ
பருத்த தோகை மயில் மேல் வரும் வேலரே
கிருத்தா பொற் பாதம் இளைத்து வருந்தி— (வாச) 1

திருட்டுத் தனமாய் சென்றதை என்னுடன்—
எடுத்துச் சொல்லிட காணுதோ
நல்ல முரட்டுக் குறவர் கண்டு வெரட்ட வந்தார்களோ—
பதட்டத்தால் வந்து நின்றீரோ
பொரட்டுத் தனம் எல்லாம் ஸரிக்கட்டுமோ ஒன்றும்
பேசாமல் நிற்குறீர் கூசுதோ வேலரே. (வாச) 2

லோகாம்பிகை பாலகரே உந்தன் ஜாலமெல்லாம் அறிவேன் நான்
சோல மயில் வாகனரே உள்ளே வாரும் நடந்ததை கூறும்
தேவி ஆச்சு நேர நாடெல்லாம்
பால ஸுப்ர மண்ய வேலரே ஏன் காணும். (வாச) 3

---

## 61

ராகம் கல்யாணி—தாளம் ரூபகம்.

பல்லவி.

வாது நீ செய்வதேதினி தகாது
தீனன் மேல் இந்த வாது நீ செய்வதேதினி தகாது.

அநுபல்லவி.

வானவர்க் இறை ஆன தேவனை வரை முனி குரு பர. (வாது)

சரணம்.

பக்தி லோலனே சக்தி பாலனே பன்னக சயன் மருகனே
உத்தம ஸத்ய குண நற் சீலனே
ஓம் எனும் கிரி மீதில் நின்றோனே
ஓம்பர்கள் அன்பாய் தொழுதிடும் பாதனே
இன்பமுடன் வள்ளி அணைந்திடும் நாதனே
வம்பரை வதைத்திடும் வடி வேல் முருகனே
தும்பி முகனுக் இளையோன் எனும் பெயரோனே. (வாது)

## 62

ராகம் ஆனந்த பைரவி—தாளம் ஆதி.

பல்லவி.

வா வா முருகேசா எந்தனுக் அருள் தா தா குமரேசா.

அனுபல்லவி.

தேவாதி தேவர் தொழும் பாதா பேதை எந்தன் மேல்
வாதா கழுகுமலை நாதா தோகை மயில் மேல். (வா)

சரணங்கள்.

மெத்தப் பரிதவித்தேன் இத்துயரத்தால் வெறும்
பித்தன் போல் ஆனேன் உந்தன் சித்தம் இரங்கி என் முன்
சக்தி வேலைக் கரத்தில் உத்தமனே தரித்து
சித்தம் மிக களித்து இத்தருணம் காத்திட. (வா) 1

இன்னம் ஏன் என்ன வாது சின்னஞ் சிறியேன் மீதில்
சொன்னேன் அனேகம் போது மன்றூ இதென்ன சூது
அன்னை பார்வதி பாலா கன்னியர் மகிழ் லோலா
ஸொர்ண வேலா இப்போது வன்ன மயிலில் ஏறி, (வா) 2

---

## 63

ராகம் சங்கராபரணம் —தாளம் ஏகம்.

பல்லவி.

வா வா வா வா வேலனே சிவ பாலனே
என் முன் வா வா வா வா வேலனே.

சரணங்கள்.

தேவர்களும் முனிவர்களும் தொழும்
திருவடியை சிறு நடம் பட வைத்து ஓடி. (வா வா) 1

கின்னரரும் கிம்புருடரும் தொழும்
பொன்னடியை இந்த புவி தன்னில் வைத்து ஓடி.(வா) 2

மூவர்களும் யாவர்களும் தொழும்
தீவினைகள் துலைக்கும் திருவடியை நான்காண.(வா வா) 3

பாரினில் உன் தாளிணையை
தேடி தவித்து நிற்கும் சிறியேன் நான் களித்திட (வா) 4
எந்தன் உலகம்மை மகிழும்
மைந்தனே உந்தன் சிந்தை மகிழ்ந்து ஓடி. (வா வா) 5

---

64

ராகம் கமாஸ்—தாளம் ரூபகம்.

பல்லவி.

வேலனே என் மீதில் தயவில்லையா
கோலா கல ஸேனாதிபனே வேலனே என் மீதில் தயவில்லையா.

சரணங்கள்.

நான் முகனை சிறை தன்னில் வைத்தோனே
பாலனாய் பார் தன்னில் லீலைகள் செய்தோனே. (வேலனே) 1
எந்தன் துயர் தீர்ப்பதுந்தனுக்கு மலையா
ஸுந்தரமாம் வேல் பிடித்து சூரனை வதம் செய்த(வேலனே) 2
ஜெனன மரணத்தால் சிறியேன் மிக நொந்தேன்
சரவண பவனே உன் தஞ்சம் என்று வந்தேன். (வேலனே) 3
ஸத்தியம் என்றிந்த கர்ப்பித ப்ரபஞ்சத்தில்
புத்தி தடுமாறுவதால் மெத்த நொந்தேன் காத்தருள.(வேல)4
இன்னமாகிலும் என் மேல் இரங்கி க்ருபை செய்வாய்
அன்னை உலகம்மை அருமை குமர வடி. (வேலனே) 5

---

65

ராகம் பூரிகல்யாணி—தாளம் ரூபகம்.

பல்லவி.

வேலனே நின் தாளை நம்பி
வந்தேன் வரம் அருள்வாய் செந்தூர் வேலனே நின் தாளை.

அனுபல்லவி.

மாது உலகம்மை குமாரா மாகத மணி மகுட உய்யாரா.(வேல)

சரணங்கள்.

சூரனை வென்ற தீரா மட தோகை மா மயில் வீரா
பாரெங்கும் புகழும் குமாரா மூவர் பணியும் முருக கெம்பீரா.

முப்புரியை வென்ற ஈசன்க் அன்று—
மூலப்பொருள் அருள் க்ருபேசன்
தாமரை பதியோன் பூஜை நேசன்—
சரவண பவனே உன் தாஸன். (வேலனே) 2

வள்ளி தெய்வானை லோலன் உயர் வானவர்க் அனுகூலன்
கள்ளர் அஸுரர் குல காலன் கருணை செய்—
ஸுப்ரமண்யா உன் பாலன். (வேலனே) 3

---

66

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

வேலனைப் பணிவோம் வா ஸகி வடி வேலனைப் பணிவோம் வா

சரணங்கள்.

கோலா கலமாய் வாழும் குமார குரு பரன் தன்
சீர்பாத கமலத்தை ச்ரத்தையுடனே ஸ்துதித்து (வேலனை) 1

செந்தூர் தன்னில் வாழும் ஸ்கந்த வடி வேலனை
அந்தரங்க பக்தியுடன் அனுதினமும் ஸ்துதித்து. (வேலனை) 2

ஸன்னதியை அடைந்தார் ஜென்ம வினை தவிர்க்கும்
பன்னிரு கையன் திரு பாதம் தன்னைப் பணிந்து (வேலனை) 3

மாய உலகில் இந்த காயம் அழிந்திடும் முன்
ஏகமாய் நாம் எல்லோரும் வேகமாகவே சென்று.(வேலனை) 4

தேவர் துயர்க்கிரங்கி சூரனுடன் எதிர்த்து
போர் தன்னில் வென்று வந்த தீர க்ருபா கரனை·(வேலனை) 5

## 67

ராகம் உசேனி—தாளம் ஆதி.

பல்லவி.

வேலன் நடனம் செய்தாரே
லோகாம்பிகை பாலன் நடனம் செய்தாரே.

சரணம்.

காலில் சிலம்பொலிக்க கையில் வடிவேல் ஜொலிக்க
மாது இருவர்களிக்க சோல மயில் நடிக்க
தாகு சேகிண சேகிணங்கிட
ததங்கித்தோம் தரிகிட ததங்கித்தோம் தரிகிட
தாம் தாம் தகு தகு—தாம் தாம் தகு தகு,
தீம் தீம் திகு திகு—தீம் தீம் திகு திகு,
தக தக தக தக—தாம் தாம் தக தக,
திக திக திக திக—தீம் தீம் திக திக,
ததிங்கிணத்தோம் தரிகிட ததிங்கிணத்தோம் தரிகிட
தை தை—தாம் தோம் என. (வேலன்)

---

## 68

ராகம் பியாக்—தாளம் ஆதி.

பல்லவி.

வேலாயுத பாணியே
சூலாயுத பாணி பெற்றெடுத்த ஸுதனே வேலாயுத பாணியே.

சரணங்கள்.

ஐங்கரன் இளையோனே ஆறுமுக வேலனே
பன்னிரு கையனே பார்வதி பாலனே. (வேலா) 1
சரவணையில் உதித்த ஷண்முக வேலனே
சக்தி வடி வேலனே பக்தர்க் கனுகூலனே. (வேலா) 2
சூராதி சூரனே சூர ஸம்ஹாரனே
ஸுப்ரமண்ய வேலனே லோகாம்பிகை பாலனே, (வேலா)

69

ராகம் எதுகுல காம்போதி—தாளம் ஆதி.

பல்லவி.

வேலை தூக்கி நின்றாடும் தெய்வமே
இந்த வேளை தூக்கி ஆள் தெய்வமே.

அனுபல்லவி.

காலை தூக்கி நின்று கனக ஸபையில் ஆடும்
கண் மூன்றுடையோன் பெற்ற காங்கேயனே வெற்றி. (வேலை)

சரணங்கள்.

ஆதித்யன் தீவட்டி அருகில் பிடித்து வர
அருணன் இரு கையாலும் அடப்பை எடுத்து வர
ரம்பை ஊர்வசி மாதர் நின்று நடித்து வர
தும்புரு நாரதர் ச்ருதியாழ் படித்து வர. (வேலை) 1

நடுவன் கத்தி தூக்க வருணன் படிக்கம் தூக்க
நிருதியும் குபேரனும் நின்றாலவட்டம் தூக்க
பருப் விழி பூதர்கள் பரிந்து மத்தளம் தூக்க
பானு கம்பன் ஸஹஸ்ர சங்கம் வைத்து முழக்க(வேலை) 2

செங்கையில் குக்குடம் ஆட சிகி வாஹனம் ஆட
பங்கையன் மாலோடு பல தேவர்களும் ஆட
அங்கையர் கண் உலகம்மை பதியோடாட
அகிலப் பூத வேதாளம் அனைத்தும் உன்னுடன் ஆட.(வே)

---

70

ராகம் கேதாரகௌளை—தாளம் ஏகம்.

பல்லவி.

ஸ்ரீ குகன் பாதம் துணையே பாரில் நமக்கானிணையே.
ஸ்ரீ குகன் பாதம் துணையே.

அனுபல்லவி.

ஞான போத சக்தி தரம் தீன ஜென ரக்ஷகரம். (ஸ்ரீ)

சரணம்.

ஸாம கான ஸம்யுதம் ஸகல தேவ பூஜிதம்
நாரதாதி பாவிதம் வீராதி ஸேவிதம்
சூரத்வேஷாதி ஸஹித ஸுர ஸேவ்ய வரத அபயகரம்
ஸ்ரீ பர சிவ ஸேவ்யதிதம் சித்ரூப குரு மூர்த்திதம், (ஸ்ரீ)

---

## 71

ராகம் ஹம்ஸத்தொனி—தாளம் ஆதி.

பல்லவி.

ஸ்ரீ ஸுப்ரமண்யனை பணிவோம் வா ஸகி
ஸ்ரீ ஸுப்ரமண்யனை பணிவோம் வா.

அனுபல்லவி.

ஸ்ரீ லோக நாயகி மகிழ் பாலனை. (ஸ்ரீ)

சரணங்கள்.

ஈசனு முன் ஸேவித சரணம்
மாசில்லா வள்ளி மனோஹர ரமணம்
பாச மோசனம் க்லேச நாசனம் க்ருபை விலாஸனம். (ஸ்ரீ) 1

குரு ஆகுவான் வரம் நமக் அருள்வான்
சிறியோர் என்று க்ருபை மிக புரிவான்
அரை விநாடியும் சிதறிடா முன்னம் விரைவினில் தேடி. (ஸ்ரீ) 2

---

## 72

ராகம் ஹம்ஸத்தொனி—தாளம் ஆதி.

பல்லவி.

ஸ்ரீ வடிவேலா க்ருத ஜென பாலா—சூராதிமா புர ஹம்ஸ வீரா
ஸ்ரீ வடிவேலா க்ருத ஜென பாலா.

அனுபல்லவி.

ப்ரேமாதி ரூபா ப்ரணவாதி தேகா
வேதாதி நாமா விரிஞ்சாதி பௌமா. (ஸ்ரீ)

சரணம்.

திருமால் மருகா ஜெய வேல் முருகா
நலமாக செய்ய நாள் இது ஐயா
குற மான் தழுவும் திருமார்பழகா
தொழுவார் ஸ்துதி கேட் உகழும் குழகா. (ஸ்ரீ)

---

## 73

ராகம் ஸ்ரீ—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஸ்ரீ வடி வேலா நமஸ்தே சின்மய ஸ்ரீ வடி வேலா நமஸ்தே
ஜெக ஜீவ பரி பால ஸ்ரீ வடி வேலா நமஸ்தே.

அநுபல்லவி.

த்ருகுண ரஹிதா பவஹிதா ஸ்ருஷ்டி ஸ்திதி விநோதா
ஸ்ரீ பர சிவ குரு நாதா ஹிறீங்கார ம்ருது பாதா வரதாயகா.

சரணம்.

கருணா ஸாகரா கனக குண்டல கிரீட பூஷித
தினகர கோடி திவாகர சோபித
தேவ தானவ முனி கெண ஸேவித. (ஸ்ரீ)

---

## 74

ராகம் மத்தியமாவதி—தாளம் ஆதி.

பல்லவி.

ஸ்ரீ வேலா ஜெய லோலா ஸ்ரீ.

அநுபல்லவி.

சூரா சூரர் சிர் அலங்காரா பாதா
தீரா அஸுரர் குல ஸம்ஹார வீரா. (ஸ்ரீ)

சரணம்.

ஈசா கதிரேசா அன்பர் ஹ்ருதய வாஸா
தேசா தேசர் புகழும் யாழ் நகர் வாஸா, (ஸ்ரீ)

---

## 75

ராகம் சங்கராபரணம்—தாளம் ஆதி.

பல்லவி.

ஷண்முகா வர்மமோ
தாஸனுன் என் மீதிலே ஏ குக ஷண்முகா வர்மமோ.

சரணங்கள்.

என் முகத்தை பார்த்திடில்
வேலா உன் முகம் வேருகுமோ ஏ குக. (ஷண்முகா) 1
ஏன் உனக் இந்த மோடியோ
மிக வாடி நிற்கும் என் மீதினில் ஏ குக. (ஷண்முகா) 2
லீலனே வள்ளி லோலனே
லோகாம்பிகை அருள் பாலனே ஏ குக. (ஷண்முகா) 3

---

## 76

ராகம் தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

ஸ்கந்த முருகையனை ஏ ஸகி கண்கள் ரெண்டும் தேடுதே.

சரணங்கள்.

ஸுந்தரி லோகாம்பிகை பாலனே செந்தூரில் வாழும்
இந்திரன் மகள் தெய்வயானை மணாளனை எந்தன் குரு நாதனை. 1
சந்திர வதனனை செந்தாமரை நயனனை
ஸுந்தரி வள்ளி மன மகிழ் லோலனை ஸுப்ர மண்ய வேலனை. 2

——:[*]:——

## 77

ராகம் அடானா—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஸ்கந்தாசல வாஸா
செங்கை மைந்தனே இங்கில் வந்தருள் செய்யும் ஈசா.

அநுபல்லவி.

மந்தஹாஸ வதன உல்லாஸ
மக மேருவில் வளர் பார்வதி ஸுதனே குண நிதனே திரு.

சரணங்கள்.

ஆதியில் விதியை ஒதிச் சிறை வைத்த நாதா
சிர மீதில் நதி அணி ஓர் அணியும் குரு நாதா
வேதங்கள் நாலும் விளம்பிடும் பாதா
போதா ஜெக நாதா ஸுக தீதா குக நாதா திரு. (ஸ்கந்தா) 1

பிள்ளைக் கறி தன்னை உள்ளன்புடன் உண்டோன் பாலா
காட்டில் கள்ளத்தனமாய் குறப்பெண்ணைக் கொண்ட நற்சீலா
புள்ளி மயிலில் அமர்ந்திடும் கோலா
புண்யா வெகு கெண்யா மனோ ரமண்யா ஸுப்ர மண்யா திரு 2

---

78

ராகம் ஹம்ஸத்தொனி—தாளம் ரூபகம்.

பல்லவி.

ஸுர ஜென வந்தித பதஸரோ ஜெனக்கருள்வாய்.

அநுபல்லவி.

அரி அயனு தியர் பணியும் ஹரன் பணி அருள் குருவே.(ஸுர)

சரணம்.

ப்றணவனர்ப் பொருள் எனப் புகழும்
அருண கிரிக் உகந்து ஸதா அருள் புரிந்திடும் பானே. (ஸுர)



ஷண்முகர் கீர்த்தனைகள்

முற்றிற்று.

உ

# ஷண்முகர் சிந்துகள்.

1

ராகம் ஹிந்துஸ்தானி காபி—தாளம் ஜம்பை. (கண்ட ஜாதி)

அய்யய்யோ இந்த ஜென்மம் எடுத்து
அலைந்து போதும் என் அய்யனே
நான் உய்யும் படி உன்
தையலருடனே ஓடி முன் வாரும் என் அய்யனே. 1
அடடா இந்த கொடிய துயர்
விட்டகலும் நாள் என்றோ அறிகிலேன்
தடையற உந்தன் திருவடி சேர்வை
பெறுவதும் என்றோ தெரிகிலேன். 2
தாங்கத் தாங்க என்மேல் ஓங்குதே
துயர் ஏங்குதே என்ன செய்குவேன்
நீங்குதில்லையே காங்கேயா உனைக் காணாமல்
பாங்காய் நான் எவ்வகை உய்குவேன். 3
போதும் போதும் இந்த பூமியில் வெகு
போகம் புஜித்தது வீரனே காரும்
கூறு கூறாக சூரனை மாய்த்த
தீரனே மயில் ஏறி முன் வாரும். 4
எந்தனைக் காப்பது உந்தனுக் ஓர் மலையோ
சொல்வாய் முருகேசனே
ஸத்ததமும் உன் சரணத்தை நம்பி நிற்கும்
தாஸன் அன்றோ சொல்லும் ஈசனே. 5
உருகுதே எந்தன் உடலம் அனலில்
மெழுகதாய் குக நாதனே
[illegible]யோ உந்தன் திரு அருளை
நான் பெறுவேனோ ஜெக நாதனே. 6

---

## 2

ராகம் ஆரபி—தாளம் ரூபகம்.

கண்டாயோ மனமே கதிர் வேலன் திருவடியை
அண்டர்கள் தேடி அலைந்து நிற்க நம் முன்
புண்டரீக வதனம் கொண்டு நின்ற அழகை. 1

கண்ணோ கண் மணியோ வான் கர்பபகமோ கரும்போ
விண்ணோ விண்ணினில் மேகத்துடன் எழும்
மின்னோ அறிகிலேனே என் மன்னோ தெரிகிலேனே. 2

கடலில் வரும் அமுதோ அன்றி காச்சின பாக அமுதோ
தொனி அமுதோ தோகை மீதினில் தோன்றிடும்
ஜோதியோ தெள்ள அமுதோ இது ஆதியோ ஆற அமுதோ. 3

வேதங்கள் நான்கினையும் விளங்க கூவும் குயிலோ
சோதில்லா மறை முடி மீதில் அமர்ந்திடும்
கோமளமோ அறியேன் பால குஞ்சரமோ தெரியேன். 4

ஆதித்யனோ சசியோ அன்றி அக்னி மின்னொளியோ
ஜோதி ஸொரூபமாய் தோன்றி நிற்கு மிதன்
ஸூக்ஷ்மம் அறிகிலேனே இதின் சாக்ஷி தெரிகிலேனே. 5

---

## 3

ராகம் நாத நாம க்ரியை—தாளம் ரூபகம்.

கழுகா சல வாஸா இரு கன்னியர்கள் நேசா
பழுதற கார்த்தருள் செய்திடும் ப்ரபுவே முருகேசா. 1

சித்தடிச் சிலப்ப திர சிறியேன் துயர் தவிர
உத்தமா ஓர் முத்தம் தா உகந்து வாரும் குமரா. 2

கோலா வேல் ரமண்யா பாரில் யாரும் புகழ் செண்யா
மேலாம் தவ புண்யா எந்தன் பால ஸுப்ரமண்யா. 3

என்ன செய்வேன் நாதா க்ருபை இன்னம் இரங்காதா
சின்னஞ் சிறியேன் மேல் குக மன்று என்ன வாதா. 4

பக்த ப்ரிய வாஸா ஸுரர் சத்ரு குல நாசா
இத்தருணம் பேச எந்தன் எதிரில் வாரும் ஈசா. 5

பன்னிரு கை வேலா இரு கன்னியர்கள் லோலா
அன்னை உலகம்மை மனம் மகிழும் சிறு பாலா. 6

---

4

ராகம் அடானா—தாளம் ரூபகம்.

கார்த்தருள் செய்குவாய் கார்த்திகேயா முருகேசா
பார்த்திபனுக் அன்று பரிந்து வரம் அருள் ஈசா. 1

தயை என்பதை முற்றும் தானமாய் எவர்க் அளித்தாயோ
தாஸனை கார்த்தருள் செய்யும் வகை மறந்தாயோ.

இத்தருணம் க்ருபை செய்யாவிடில் என்ன செய்வேன்
கர்த்தனே உன் அடி காணாமல் எவ்வகை உய்வேன். 3

---

5

ராகம் தோடி—தாளம் ரூபகம்.

குற்றம் எத்தனைகோடி செய்தாலும் குமரனே நீ பொறுத்தருள்
வல்வற்றுத் துறையில் வாழும் எங்கள் வடிவேலனே நீ வந்தருள்

பக்தர்களை நிந்தித்திருந்தாலும் பரமனே நீ பொறுத்தருள்
சக்தி வள்ளி தெய்வானை உடனே உத்தமனே நீ வந்தருள். 2

பாரில் நான் கோடிபாபம் செய்தாலும் வேலனே நசிப்பித்தருள்
கோலமா மயில் மீதில் ஏறியே குமரனே என் முன் வந்தருள். 3

---

6

ராகம் நாதநாம க்ரியை—தாளம் ஏகம்.

சரவண பவ குக நாதா ஷண்முகனே ஸ[illegible]க போதா. 1

ஸேனாதிபனே சிவ பாலா தெய்வயானை மணவாளா. 2

சூரபத்ம[illegible]ன்ற பாலா ஸுப்ரமண்யா வடி வேலா. 3

வள்ளி மேல் மோகம் கொண்ட தேவா
வானோர்கள் போற்றும் பொற் பாதா. 4

தினை மாவுக் இச்சை கொண்ட தேவா
தேவாதி தேவா குக நாதா. 5

உந்தன் மனம் இரங்காதா—ஸொந்த
அன்பர் இடத்தில் என்ன வாதா. 6

மெத்த மயங்குகின்றேனே—என் மேல்
செற்றே க்ருபை செய் முருகோனே. 7

பன்னிரு கண்களால் பாரும்—எந்தன்
எண்ணற்ற வினைகளை தீரும். 8

கார்த்திகேயனே இங்கே வாரும்—எந்தன்
கர்ம பயம் தவிர்த்துக் காரும். 9

லோகாம்பிகை பாலனே வாரும்—பொல்லா
கால பயம் தவிர்த்துக் காரும். 10

---

## 7

ராகம் ஆகிரி—தாளம் ஜெம்பை.

சரவண பொய்கை தன்னிலே தன்மயமாய் வந்துதித்த
பரமர் திரு ஸுதனை பணிந்திடுவாய் என் மனமே. 1

கடல்க் கரையில் வீற்றிருக்கும் ஸ்கந்த வடிவேலவனை
அடைக்கலம் என்று பணிந்தால் திடுக்கம் உனக்கொன்றுமில்லை

ஜென்மம் என்னும் நோயை க்ஷணத்தில் நிவிர்த்தி செய்யும்
சின்மய ஸொரூபன் தன்னை ச்ரத்தையுடன் பணிவாய். 3

ஷண்முகமும் தரித்த சடாக்ஷர ஸொரூபம் தன்னை
பந்த வினை அகல ஸந்ததம் பணி மனமே. 4

பச்சை மயில் வாகனனை பார்வதி தன் பாலகனை
சித்த சுத்தியுடனே நித்தியம் ஸ்துதிகள் செய்வாய். 5

கோல மயில் ஏறி வரும் குமர வடிவேலவனை
ஏக மனதுடனே இருந்து ஸ்துதிகள் செய்வாய். 6

ஸத்து சித்தானந்த சாச்வதமாய் விளங்கும்
எத்திசையிலும் நிறைந்த சக்தி வடிவேலவரா. 7

ப்றணவ மந்திரத்தின் பொருள் அறியா ப்ரம்மன் தன்னை
சிறை தன்னில் அடைத்து விட்ட குமர வடி வேலவரோ. 8

தேவர் சிறை மீட்டு தெய்வ யானையை மணம் புரிந்து
சூரனை வதைத்து வந்த ஸுப்ரமண்ய வேலவரோ. 9

கானகத்தில் கன்னிகையாய் அவதரித்த வள்ளி தன்னை
காந்தர் விவாஹம் புரிந்த ஸ்கந்த வடி வேலவரோ. 10

தாரகன் தன்னை வதைக்க பார் தன்னில் அவதரித்த
தீன தயாகரனை வேலனைப் பணி மனமே. 11

புள்ளி மயில் வாகனனை வள்ளி கணவன் தன்னை
அல்லும் பகலும் ஸ்துதித்தால் அபரோக்ஷமாய் இருப்பாய். 12

உறுதியாக நம்பியே நீ உலகம்மை பாலகனை
மறவாமலே ஸ்துதித்தால் பிறவாமலே இருப்பாய். 13

---

8

ராகம் சுருட்டி—தாளம் ஜெம்பை (திஸ்ர நடை)

சிந்தை மகிழ்ந்து திருச் செந்தூர் தன்னில்ச் சென்று
ஸ்கந்த வேலனைக் கண்டு கரம் குவித்து எதிர் நில்லாதவன்
அன்பில்லாதவன் மனம் செல்லாதவன் பெயர் சொல்லாதவன்

திரு ஸுதந்தரர் தொழும் திருவடியைப் பணிந்து
வதனாரம்பம் தன்னில் மனம் மகிழ்ந்தொரு
ஸ்நானம் பண்ணாதவன் மனம் நண்ணாதவன்
தர்மம் பண்ணாதவன் பண்ண எண்ணாதவன். 2

தேவ ஸேனாதி பதி திருவடியை வெகு மலர் எடுத்து மனம்
மகிழ்ந்து நின்று அர்ச்சனை செய்யாதவன்
மனம் நய்யாதவன் பணி செய்யாதவன் பூஜை செய்யாதவன். 3

பாரில் இப்பாவியை காலன் கோபம் கொண்டு
தீய தூதரை விட்டு தண்டனை செய்து கட்டி இழுக்கானோ
வெட்டிக் கிழிக்காமல் சுட்டுக் குழைக்கானோ
கஷ்டம் ஒழிப்பானோ. 4

வஸிந்து நகரில் போய் தெரிசனம் செய்யாத
தீயரை எமன் வெகு கோபத்துடன் காலால் உதைக்கானே
கையால் சிதைக்கானே மண் மேல் துகைக்கானே
தண்டனை விதிக்கானே 5

அருமறைகள் ஸ்துதிக்கும் திருவடியைப் பணிந்து
சரவண பவா என்று ஒரு தரம் உரைத்தோர்க்கு பணியானே
எமன் பணியானே தலை குனியானே பணி புரியானே. 6

திருசீர் அலைவாய் போய் தேவ ஸேனாபதியை ஒருதரம் ஆகிலும்
தெரிசனம் செய்தோர் பால் வருவானே
எமன் வருவானே துயர் தருவானே பெயர் பகர்வானே. 7

யார் துணை யாவுர் இப்பார் தன்னில் வேலன் அன்றி
தீர விசாரித்தந்த திருவடியைச் சேராமல் இருப்பாரோ
மனம் தரிப்பாரோ நாளை கழிப்பாரோ வீணாய் பிறப்பாரோ. 8

தேவி லோகாம்பிகை பாலன் திருவடியை
ஆவி அடங்கும் முன் தாமஸம் செய்யாமல் பணிவோம் வா
பணி புரிவோம் வா ஸ்துதி புரிவோம் வா வரம் பெறுவோம் வா

---

9

ராகம் பியாக்—தாளம் ஏகம்.

சீர் பெருகும் சிவகிரி வாஸா உமை பார்வதி தந்தருள் குமரேசா
மாதிரு மங்கையருடன் வாஸா—என்னை
பாரும் க்ருபை கண்ணால் முருகேசா. (1)

ஸ்ரீ மீனாம்பிகை தன் ஸுதனே சிவகிரியில் வஸித்திடும் குகனே
பார் அளந்தோன் திரு மருமகனே—என் மேல்
பக்ஷம் வைத் அருள்வாய் ஷண்முகனே. (2)

ஆறுமுகா சிறுபாலனையா—என்னை
ஆதரித்தருள்வ தின் பாரம் ஐயா
பாரினில் பிறந்ததும் போதும் ஐயா—உந்தன்
பாதத்தில் என்னை வைத்தாளும் ஐயா. (3)

மூவர் சிறை விடுத்திட்டோனே—கும்ப
முனிக்கு குருவாய் வந்திட்டேனே
துஷ்டர்களை வதைத்திட்டோனே—அன்பர்
பக்தி வலையில் அகப்பட்டோனே. (4)

த்ருபுரம் எரித்த சிவன் பாலா—எந்தன்
துயரம் தவிர்த்தருள் குக வேலா
அகில சரா சர பரி பாலா—என்னை
ஆள்வதுன் பாரம் குக வேலா. (5)

மா துலகம்மை மகிழ் பாலா மரகத மயில் மேல் வரும் வேலா
கார் குழலாள் வள்ளி மணவாளா—என்னை
காப்பதுன் பாரம் வடி வேலா. (6)

---

## 10

ராகம் சங்கராபரணம்—தாளம் ரூபகம்.

செந்தூர் தன்னில் வாழும் ஸ்கந்தா
எங்கள் லோகாம்பிகை மைந்தா
செந்தாமரை மலரை நிகழ்ந்தா
உன் தாள் பணிந்தேன் நான் ஸ்கந்தா. (1)

வள்ளி தெய்வானை ஸமேதா
உயர் புள்ளி மயில்மேல் வரும் நாதா
பெற்ற பிள்ளை மேல் என்ன வாதா
செற்றும் உன் உள்ளம் இரங்காதா. (2)

தேவர்களை காக்கவில்லையோ
அன்று சூரனை ஸம்ஹரிக்கவில்லையோ
ஏதுனக் என் மேல் தயவில்லையோ
இத்துயர் தீர்ப்பது மலையோ. (3)

செத்த பூனைக் உயிர் கொடுத்தாய்
உந்தன் உத்தம பக்தர் துயர் விடுத்தாய்
சக்தி வேலை கரத்தில் பிடித்தாய்
அத்தனை உல[illegible]படைத்தாய். (4)

குதிரை முகத்தை மாற்றி வைத்தாய்
அன்பர் குறைகள் எல்லாம் நீக்கி காத்தாய்
சிறியேனை வாவென்றழைத்தாய்
இப்போ அனைவரும் நகைக்கவே வைத்தாய் (5)

இன்னம் பராமுகம் ஏனோ
சின்ன பாலர்கள் செய்கை இது தானோ
ஸ்தன்ய பால் உண்ணும் வேளை தானோ
தமியேனை மறந்ததும் ஏனோ. (6)

---

## 11

*ராகம் சங்கராபரணம்—தாளம் ஆதி.*

செந்தூர் தெரிசனம் காணுவிடில் இந்த
ஜென்மம் ஸாபல்லியமாமோ
தீன சரண்ய கருணா கர வேலனை சிந்தை மறக்கலாமோ. 1

பன் மறைகள் ஸ்துதிக்கும் பாதத்தைக் காணாத
கண்கள் இருக்கலாமோ
பார்தன்னிலே இப்படி எமன் வரும் அளவும்
காலம் கழிக்கலாமோ. (2)

சிறலைவாய் உறை வேலன் புகழை கேளா
செவிகள் இருக்கலாமோ
பார் தன்னிலே பிறந்தும் இருந்தும் பலன் பெறாமல்
பாபியாய் போகலாமோ. (3)

ஆறெழுத்தை நித்தியம் அன்புடன் ஜெபியாத
நாவும் இருக்கலாமோ
கோர ஜெனன ஸம்ஸார ஸாகரம் தன்னில்
குளித்து பிறக்கலாமோ. (4)

ஸ்கந்தன் திருவடியை ஸததம் பூஜை செய்யா
கைகள் இருக்கலாமோ
பந்தம் என்னும் பெரிய பாழ் நரகில் விழு நாம்
பாத்திரமாகலாமோ. (5)

வேலன் வஸிக்கும் திரு கோவில் வலம் வராத
கால்கள் இருக்கலாமோ
கோலாகலமாய் எமன் கூவி அழைக்கும் போது
[illegible] இருக்கலாமோ. (6)

காயம் இருக்கச் செந்தூர் நாதனைக் காணமல்
காலம் கழிக்கலாமோ
மாய உலகில் வெகு நாள் இருப்போம் என்று
மதி மோசம் போகலாமோ. (7)

---

## 12

ராகம் பூரிகல்யாணி—தாளம் ஆதி.

செந்தூர் போகாமல் இருப்பேனோ—இந்த
தேகத்தை சதம் என்றிருப்பேனோ—நான் 1
செந்தூர் போகாமல் இருப்பேனோ—இந்த
ஜென்மத்தை வீணாக கழிப்பேனோ—நான் 2
செந்தூர் போகாமல் இருப்பேனோ—இந்த
ஜெனனத்தில் புகந்தின்னம் பிறப்பேனோ—நான் 3
செந்தூர் போகாமல் இருப்பேனோ—பொல்லா
அந்தகனுக் ஆளாக பவிப்பேனோ—நான் 4
செந்தூர் போகாமல் இருப்பேனோ—எந்தன்
தேசிகனை பிரிந்து இருப்பேனோ—நான் 5
செந்தூர் போகாமல் இருப்பேனோ—இன்னம்
சிந்தை தளர்ந்து பரிதவிப்பேனோ—நான் 6
செந்தூர் போகாமல் இருப்பேனோ—எந்தன்
ஸ்கந்தனை காணமல் புஜிப்பேனோ—நான் (செந்தூர்) 7

---

## 13

ராகம் சங்கராபரணம்—தாளம் ஏகம்.

ஜெயந்தி நகர் வாஸா என் தேசிகா குகேசா
அலைந்தேன் உன்னை தேடி மனம் தளர்ந்தேன் ஜெக தீசா. 1

வருவாய் வருவாய் என்று வழி பார்த்து நின்றேன்
தருவாய் வரம் என்று நம்பி ஸங்கடத்தை விண்டேன். 2

இரும்போ வன் பாறையோ இரங்காதோ உன் உள்ளம்
ஏ கரும்பே உன்னை நம்பின என் காரியமோர் பள்ளம். 3

தீனரை க்ருபையேன் என்று செய்த வ்ருதம் பொய்யா
ஏ நாதனே எந்தனை செற்றும் பாராதேன் சொல்லையா. 4

பச்சிமா நகரம் தன்னில் பாலான்க் அருள் செய்ய
ஏ அச்சுதன் மருகனே நீ இக்ஷணமே வருவாய். 5

---

## 14

ராகம் கல்யாணி—தாளம் ஆதி.

பல்லவி.

தேவாதி தேவரடி ஸகியே தேவர்களை காத்தோரடி ஸகியே
தேவாதி தேவரடி தேவர்களை காத்தோரடி
சூரனை வதைத்தோரடி ஸுப்ரமண்ய வேலரடி
தேவாதி தேவரடி ஸகியே தேவர்களை காத்தோரடி ஸகியே.

சரணங்கள்.

மங்கள ஸொரூபரடி ஸகியே எங்கிலும் நிறைந்தோரடி ஸகியே
மங்கள ஸொரூபரடி எங்கிலும் நிறைந்தோரடி
பங்கஜ நயனரடி பக்தர் மேல் க்ருபாளரடி. (தேவாதி) 1

ஸத்து சித்தானந்தரடி ஸகியே சுத்த ஸுகரூபரடி ஸகியே
ஸத்து சித்தானந்தரடி சுத்த ஸ்ுக ரூபரடி
நித்ய நிராகாரரடி நிர்மல வேதாந்தரடி. (தேவாதி) 2

ஆதி அந்தம் அற்றோரடி ஸகியே—
போத ஸாக்ஷாத் காரரடி ஸகியே
ஆதி அந்தம் அற்றோரடி போத ஸாக்ஷாத் காரரடி
வேதமுடிப் பொருளடி விமல ப்ரகாசரடி. (தேவாதி) 3

ஜாதி பேதம் அற்றோரடி ஸகியே ஜோதி ஸுகரூபரடி ஸகியே
ஜாதி பேதம் அற்றோரடி ஜோதி ஸுகரூபரடி
பேதா பேதம் அற்றோரடி ப்றணவ ஸொரூபரடி (தேவாதி)

நாம ரூபம் அற்றோரடி ஸகியே வ்யாபகமாய் உற்றோரடி சகியே
நாம ரூபம் அற்றோரடி வ்யாபகமாய் உற்றோரடி
பாமரர் அறியாரடி பக்தர்கள் அறிவாரடி. (தேவாதி) 5

அன்பர்கள் மேல் தயவுடன் ஸகியே—
ஸ்கந்தன் என்னும் பேர் தரித்தார் ஸகியே
அன்பர்கள் மேல் தயவுடன்—
ஸ்கந்தன் என்னும் பேர் தரித்தார்
எந்த வரமும் கொடுப்பார் நம்பினோர் துயர் விடுப்பார். 6

கால பயம் தீர்ப்பாரடி ஸகியே லோகாம்பிகை பாலரடி ஸகியே
கால பயம் தீர்ப்பாரடி லோகாம்பிகை பாலரடி
வேல் முருகன் நாமம் தன்னை கனவிலும் மறவாதடி (தே)7

---

## 15

ராகம் செஞ்சுருட்டி—தாளம் ஏகம்.

பல்லவி.

பழனி பண்டாரம் உன்னை பணிந்து கொண்டேனே—திரு.

சரணங்கள்.

செந்தாமரை முகனே ஸுந்தர வேலாயுதனே
இந்திராதியோர் பணியும் ஏறும் மயில் வாகனனே. (பழனி) 1

மழை விடை யானுடனே மாங்கனிக்காகப் பிணங்கி
கிழவன் போல் கோலம் கொண்டு கெம்பீரமாக நின்ற(பழனி) 2

ஸ்கந்தா சஷ்டிதனே கார்த்திகை அருள் பவனே
மந்தாகினி ஸுதனே மால் மகிழும் வேலவனே. (பழனி) 3

குறத்தி மேல் மோகம் கொண்டு கோல் பிடித்து நடை தளர்ந்து
தினைப்புனம் எல்லாம் அலைந்து சிற்றாறில் வந்தவனே.(பழனி) 4

வள்ளிக் இசைந்தவனே வானவர் தொழு பவனே
வெள்ளைவிடையோன் பணியும் புள்ளி மயில் வாஹனனே. (பழ)

---

## 16

ராகம் நாதராமக்ரியை—தாளம் சாப்பு.

பல்லவி.

பாராமல் இருக்கலாகாது
திரு சீறலைவாய் வடிவேலனை நாளும் பாராமல் இருக்கலாகாது

சரணங்கள்.

பார் புகழும் வடிவேலன்
மாதுலகம்மை மகிழ்ந்திடும் பாலன்
கார் குழலாள் வள்ளி லோலன்
தன் கழலிணை சார்ந்தார்க்கருள் செய்யும் சீலன். (பாரா) 1

அந்தணர் முனிவர்கள் கூட்டம்
அமரர் ப்ரம்மாதி இந்திராதியர் நாட்டம்
ஸந்ததம் பூஜை கொண்டாட்டம்
அந்த சரணத்தை சார்ந்தார்க்குண்டோ மிக வாட்டம்.(பாரா)2

செத்தால் உண்டோ இஹ போஹம்
இதில் மெத்த மயங்கி வருவதேன் மோஹம்
கத்துதய்யோ நாலு வேதம்
ஸ்கந்தன் கழலிணை காணுதாரே ஜீவ ப்ரேதம் (பாரா) 3

அந்தகன் வந்திடும் நாளில்
இவர்க்கு யார் துணை உண்டென்று எண்ணி இன்னாளில்
கொண்டாட்டமாய் வாழ்கின்றார்கள்
இந்த குருடர்கள் வேலன் பாதம் சேர்ந்திடார்கள் (பாரா) 4

க்ஷணமும் நில்லா அற்ப வீடு
இதை ஸ்திரமென்று நம்பி திரிவது கேடு
பரவி வந்தால் விழும் கூடு
நீ தான் மா மயில் வேலன் மலரடி நாடு. (பாரா) 5

சோத்துச் சுமை இதை தேற்றி
போத்தி வளர்த்து பொழுதெல்லாம் போக்கி
பார்த்து மகிழ்ந்து திரிந்தால்
காலை கூத்தன் வந்தே க்ஷணம் கொண்டோடி போவான்.(பாரா)

மாது வள்ளி மகிழ் லோலன்
மரகத மயிலில் அமர்ந்திடும் கோலன்
தேவி லோகாம்பிகை பாலன்
திருச் செந்தில் அமர்ந்தன்பர்க்கருள் செய்யும் சீலன். (டாரா)

---

## 17

ராகம் சங்கராபரணம்—தாளம் ஏகம்.

பல்லவி.

பிரிந்திருக்கப்போமோடி ஸகியே
திருச்செந்தில் வளர் ஸ்கந்தன் சிவ மைந்தனை விட்டென்னாலே
பிரிந்திருக்கப்போமோடி ஸகியே.

சரணங்கள்.

காலில் சிலம்பணிந்த நாதன்
அன்பர் கர்ம பயத்தை தீர்த்து ஆள்க்கொள்ளும் போதன்
சூரனை வதைத்திட்ட தீரன்
இப்போ பாலனாய் நின்ற வடிவேலனை விட்டென்னாலே. (பிரி) 1

மூவர்கள் சிறை விடுத்த நாதன்
முன்னே கும்ப முனிக்கு குருவாய் வந்த தேவன்
பாலனாய் வேல் பிடித்த சீலன்
இப்போ கோல மயில் மேல்நின்ற குமாரனை விட்டென்னாலே. (பி

எங்கிலும் வ்யாபகமாய் நிறைந்த ஜோதி
எந்தனுக்காய் இந்த அவனி தன்னில் வந்து
ஸுந்தர வேஷம் புனைந்து
ஸ்கந்தன் என்னும் பேர் தரித்த கருணையை விட்டென்னாலே.(பி)

வெகு காலமாய் தவம் செய்தாலும்
இப்போ குமரன் கொண்ட பால ரூபம் தனைக் காண
அரிதாகும் யார்க்கும் கிடையாது
மெத்த சிறியேன் முன் லீலைசெய்த மகிமையைவிட்டென்னாலே

வலுவிலே வந்தெந்தன் முன்னே
மிக அரிதான தெரிசனம் தந்ததின் பின்னே

விரைவாக மறைந்தார் என் அன்னே
இந்த பரிதாபம் யாருடன் சொல்வேன் என் கண்மணே. (பிரி) 5

ஆஹாரம் நித்திரையும் இல்லை
முருகையனைக் காணுமல் இருக்க மனம் வல்லே
மேலும் பரமரரை சேர்ந்தென்ன தொல்லை
இந்த பரிதாபம் சொல்ல எனக் ஒருவரும் இங்கில்லை. (பிரி) 6

கானல் ஜெலம் போல தோன்றும்
இந்த கர்ப்பித ப்ரபஞ்சத்தின் கபடம் அறியாமல்
வீணில் திரிந்ததுவும் போதும்
லோகாம்பிகை பாலன் வடி வேலனை விட்டென்னுலே. (பிரி) 7

---

## 18

ராகம் சங்கராபரணம்—தாளம் ஏகம்.

பேதை எந்தனை காத்திட-போதா ஸுரர்கள் தொழும்
பாதா கழுகுமலே-நாதா தோகை மயில் மேல் வா வா வா. 1

மைந்தன் எந்தனை காத்திட—சிந்தா பரமர் திரு
மைந்தா கழுகுமலே—ஸ்கந்தா தோகை மயில் மேல் வா வா வா. 2

பாலன் என் குறை தீர்த்திட-கோலா குற மகள் தன்
லோலா கழுகுமலே—வேலா தோகை மயில் மேல் வா வா வா. 3

வானவர் ஸ்துதி செய்திடும்-மானே வானவர் தொழும்
தேனே கழுகுமலே-கோனே தோகை மயில் மேல் வா வா வா. 4

தீனர்கள் இடர் தீர்த்திடும்-தேனே தெய்வானை மகிழ்
வோனே கழுகுமலே-கோனே தோகை மயில் மேல் வா வா வா 5

கானக குற மாதின் மேல்—மோகா பரமர் தொழும்
பாதா கழுகுமலே-நாதா தோகை மயில் மேல் வா வா வா. 6

---

## 19

ராகம் காபி—தாளம் ஏகம்.

பல்லவி.

ரொப்ப ரொப்ப வரம் நான்கழ்க்கவில்லை
முருகா நீர் போஜனை செய்ய வேண்டாம்

வேலனே நீர் மனது மலையவேண்டாம்
ரொம்ப ரொம்ப வரம் நான் கேழ்க்கவில்லை,

சரணங்கள்.

ஓம்பர்கள் ஸேனை தலைவனாக வேணும்
என்று வரம் கேட்டதுபோல் கேழ்க்கவில்லை. [ரொம்ப] 1
தாஸி வீட்டில் தூது செலலவேணும் என்றோர்
தாஸன் வரம் கேட்டதுபோல் கேழ்க்கவில்லை. (ரொம்ப) 2
ஆயிரத்தெட்டண்டங்களை ஆளவென்று
சூரபத்மன் போல் வரம் நான் கேழ்க்கவில்லை. (ரொம்ப) 3
தேவர்களை ஏவல் கொள்ளவேணும் என்று
ஸிம்ஹவக்திரன் போல் வரம் நான் கேழ்க்கவில்லை (ரொம்ப) 4
யாவர்களையும் ஜெயிக்க வேணும் என்று
தாரகனை போல் வரம் நான் கேழ்க்கவில்லை. (ரொம்ப) 8
கோட்டை வாசல் காவல் செய்யவேணும் என்று
கேட்ட பானுஸுரன் போல் நான் கேழ்க்கவில்லை, (ரொம்ப] 6
ஹஸ்தத்தினால் பஸ்மம் ஆக்கவேணும் என்று
பத்மாஸுரன் போல் வரம் நான் கேழ்க்கவில்லை. (ரொம்ப) 7
இந்திரன் பதவி வேணும் என்றெனக்கு
ஸ்கந்தனே நான் உந்தனிடம் கேழ்க்கவில்லை. (ரொம்ப) 8
மூவர்கள் பதவி வேணும் என்றெனக்கு
முருகனே நான் உந்தனிடம் கேழ்க்கவில்லை, (ரொம்ப) 9
செந்தாமரை பாத த்யானம் என் மனதில்
ஸந்தமும் மறவாதிருந்தால் போதும். (ரொம்ப) 10
மாமயிலும் வேலும் உன் மலர் பாதமும்
ஒரு பொழுதும் மறவாதிருந்தால் போதும். (ரொம்ப) 11
திரு ஸுதந்திரர் தொழும் உன் சீர் பாதத்தை
கனவிலும் நான் மறவாதிருந்தால் போதும். (ரொம்ப) 12
ஜெயந்தன் மேல் வந்த உன் பெருங் கருணை
ஸந்தமும் எந்தன் மேல் இருந்தால் போதும். (ரொம்ப) 13

கன்னியருடன் பிறந்த துன்பம் தீர
பன்னிரு கண்ணாலும் என்னை பார்த்தால் போதும். (ரொம்ப) 14
எந்தவேளை நினைந்தாலும் என் முன் வந்து
ஸ்கந்தனே நீர் தெரிசனம் தந்தால் போதும். (ரொம்ப) 15
கிடத்திலும் கேடாய் ஜென்மம் வந்த போதும்
தேடி வந்துன் தெரிசனம் தந்தால் போதும். (ரொம்ப) 16
இக்ஷணமே நான் தருவேனென்று சொன்ன
அக்ஷயமாய் ஒரு வரம் தந்தால் போதும். (ரொம்ப) 17
ஸத்தியம் செய்து தருவேனென்று சொன்ன
உத்தமனே ஒரு வரம் தந்தால் போதும். (ரொம்ப) 18
வேலனே உந்தனை விட்டகலாமல் நான்
லோகாம்பிகை பாலனே இருந்தால் போதும். (ரொம்ப) 19

---

## 20

ராகம் ஆரபி—தாளம் ஆதி.

பல்லவி.

வாராயோ மயிலேறி வள்ளி தெய்வானையுடன்
தீராயோ என் துயரை செந்தூரா இந்நேரம்.

சரணங்கள்.

பாராயோ எந்தனை உன் பன்னிரு கண்ணாலும்
தாராயோ உந்தன் அருள் ஷண்முகனே இந்நேரம். (வாரா) 1
பித்தன் போல் ஆனேனே அத்தனே உனைக் காணாமல்
சித்தம் இரங்காயோ இத்தருணம் வந்தருள. (வாரா) 2
இரவும் பகலும் உன்னை முருகா முருகாவென்று
கதறுவதும் உன் செவியில் சிறிதேனும் கேழ்க்கலையோ (வாரா) 3
கூவும் குறல் ஓசை குகனே உன் திருச்செவியில்
கேளாத வகை ஏதோ கூறாய் ஸ்ரீ ஷண்முகனே. (வாரா) 4
காதில் அணிந்த கனகமணி குண்டலங்கள்
கலந்ததோ என் சொல்லை அறிந்திலையோ ஷண்முகனே. (வாரா)

அடியார்கள் ஸ்துதி செய்யும் ஆரவார தொனியால்
கொடியேன் சொல் உன் செவியில் புகுதலையோ ஷண்முகனே.

எவ்விதமோ நான் அறியேன் என்னை முகம் பாராமல்
என் துயரை தீராமல் இருப்பதுவும் ஷண்முகனே (வாரா) 7

ஏனிந்த மோடியோ ஏழையாம் எந்தன் மேல்
பேதை என்றறியாயோ ப்ரபுவே ஸ்ரீ ஷண்முகனே. (வாரா) 8

ஆவி உடலை விட்டு அகன்று வெளி போன பின்போ
தாகம் தீர்த்தருள் செய்ய தயை செய்வாய் ஷண்முகனே (வா) 9

உயிரும் உடலை விட்டு ஓடி வெளி போன பின்போ
குறை தீர்க்க வந்திடுவாய் குகனே ஸ்ரீ ஷண்முகனே. (வாரா) 10

காலன் வந்து இவ்வுயிரை கவர்ந்து கொண்டு போன பின்போ
நீ வரலாம் என்று நினைந்திருக்காய் ஷண்முகனே. (வாரா) 11

பலநாளாய் அழைத்தும் உன் பன்னிரு செவிகளிலும்
புகுதலையோ ஓர் மொழியும் பகருயோ ஷண்முகனே (வாரா) 12

தீனன் என்றறியாயோ சிறியேன் மேல் முனிவேதோ
தாமஸம் செய்யாமல் தயை செய்வாய் ஷண்முகனே (வாரா) 13

லீலா விநோதனே பால ஸுப்ரமண்யனே
ஞான ப்ரிய வேலனே லோகாம்பிகை பாலனே. (வாரா) 14

———:[*]:———

## 21

ராகம் நாதநாமக்ரியை—தாளம் ஆதி.

வேலனே உந்தன் தாளிணை காணாமல்
பாலன் நான் தவிக்குகின்றேன்
சீலனே எந்தன் மீதினில் தயவாய் தெரிசனம் தந்தருள்வாய். 1

ஸ்கந்தனே உந்தன் கழலிணை காணாமல்
மைந்தன் நான் மயங்குகின்றேன்
எந்த விதமாகிலும் இந்த வேளை தன்னில்
வந்தென்னை காத்தருள்வாய். 2

நேனே உந்தன் திருவடி காணாமல்
சிறுவன் நான் கதறுகின்றேன்
றைற் தேடிடும் அருட் போருளே எங்கள்
பெரும் குறை தீர்த்தருள்வாய். 3

மண்யா உந்தன பொற் பாதம் காணாமல்
அர்ப்பன் போல் அலையுகின்றேன்
செப்ப ஒண்ணு உந்தன் அற்புத தெரிசனம்
இப்போதே தந்தருள்வாய். 4

பேதை எந்தனை இந்த சோதனை செய்வது
நீதியோ சொல்லும் ஐயா
ஏதோ உன் மனச் சூதோ இதென்ன நீதோ கல் உயபுர: 5

பாரில் எந்தனை போல் தீனன் ஒருவர் உண்டோ
பன்னிரு கை வேலா
கோல மயில் மேல் வந்தென்னைக் காரும் லோகாம்பிகை பாலா. 6

---

## 22

ராகம் கல்யாணி—தாளம் ரூபகம்.

ஷண்முகா தயவில்லையோ குக ஷண்முகா தயவில்லையோ
ஏ ஷண்முகா தயவில்லையோ 1

எந்தன் மேல் உனக் என்ன வாதையா
இன்னமும் வேல் முருகையா
ஓ இன்னமும் வேல் முருகையா. 2

பன்னிருகண்ணால் பாராயோ சிறுபாலன்என்றென்னை காராயோ
ஓ பாலன் என்றென்னை காராயோ. 3

வேலனே இங்கே வாராயோ எந்தன்
தாகம் தீர்த்தருள் தாராயோ
ஓ தாகம் தீர்த்தருள் தாராயோ. 4

கூவினேன் உன்னை தேடினேன் எங்கும்
காணாமல் மனம் வாடினேன்
ஓ காணாமல் மனம் வாடினேன். 5

மோடி செய்திட[illegible] ஆருமோ முருகேசனே எந்தன் மீதினில்
ஏ ஈசனே எந்தன் மீதினில்.

வந்தனம் செய்தேன் ஸ்கந்தனே உந்தன்
செந்தாமரை பொற் பாதத்தில்
ஓ செந்தாமரை பொற் பாதத்தில்

லோகாம்பிகை தன் பாலனே ஸுகு சீலனே வள்ளி லோல
ஏ சீலனே வள்ளி லோலனே.

---

## 23

ராகம் காம்போதி—தாளம் ரூபகம்.

ஸ்கந்த பர்வதத்தில் வளர் ஸுப்ரமண்ய வேலனே
இஹம் தன்னில் எந்தனுக் அருள் இன்ப வள்ளி லோலனே. 1

கரம் தன்னிலே வேல் தரித்த ஸ்கந்த வடி வேலனே
பரிந்து வந்தெனக்கருள் ஈசப் பரமன் அருள் பாலனே. 2

பக்தி செய்ய அறிகிலேன் உன் பாதமலர் பணிகிலேன்
முக்தி பெற முயலுகின்றேன் நித்தியனே நீ தருவயோ. 3

உத்தமா உன் பாத பூஜை ச்ரத்தையாய் நான் செய்திலேன்
நித்திய ஸுகம் விரும்புகின்றேன் நிமலனே நீ தருவயோ. 4

பாரில் வெகு பற்று வைத்துன் பாதம் தன்னை தெரிசிக்க
கோருகின்றேன் எந்தன் முன்னே குமரனே நீ வருவயோ. 5

கோடி கோடியாய் பிழைகள் மூடன் நான் செய்திருந்தாலும்
ஆடும் பாதம் தேடும் எந்தன் ஐயனே நீ பொறுத்தருள். 6

உந்தனுடன் இரண்டற இருக்கும் இன்ப முக்தியை
இந்த வேளை எந்தனுக்கு ஸ்கந்தனே நீ தந்தருள். 7

:[ஸ்ரீ]:

ஷண்முகர் சிந்துகள்

முற்றிற்று.